உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசுசுவாமிகள்
# புராணச்சுருக்கம்.





**சேக்கிழார்சுவாமிகள்**

அருளிச்செய்த

பெரியபுராணத்திலிருந்து
யெடுத்தெழுதியது.



திருப்பராய்த்துறை.

முத்துக்காமாக்ஷி பிள்ளையால்

திருச்சி.

லெக்ஷ்மி விலாஸப்பிரஸில்
அச்சிடப்பெற்றது.

இதின் விலை

ஆனந்த ௵ மாசி ௴

1915.

உ

சிவமயம்.



# திருநாவுக்கரசுசுவாமிகள்புராணம்.

திருச்சிற்றம்பலம்.



**உலகெலாமுணர்ந்தோதற்கரியவ**
**னிலவுலாவியநீரமலிவேணியன்**
**அலகில்சோதியனம்பலத்தாடுவான்**
**மலர்சிலம்படிவாழ்த்திவணங்குவாம்.**

*திருநாவுக்கரசுவளர்திருத்தொண்டினெறிவாழ*
*வருஞானத்தவமுனிவர்வாகீசர்வாய்மைதிகழ்*
*பெருநாமச்சீர்பரவலுறுகின்றேன்பேருலகில*
*ஒருநாவுக்குரைசெய்யவொண்ணாமையுணராதேன்* 1.

*தொன்மைமுறைவருமண்ணின்றுகளன்றித்துகளில்லா*
*நன்மைநிலையொழுக்கத்தினலஞ்சிறந்தகுடிமல்கிச*
*சென்னிமதிபுனையவளர்மணிமாடச்செழும்பதிகண்*
*மன்னிநிறைந்துளதுதிருமுனைப்பாடிவளநாடு* 2.

*மறந்தருதீநெறிமாறமணிகண்டர்வாய்மைநெறி*
*யறந்தருநாவுக்கரசுமாலாலசுந்தரரும*
*பிறந்தருளவுளதானமமளவோபேருலகிற்*
*சிறந்ததிருமுனைப்பாடித்திறம்பாடுஞ்சீர்ப்பாடு* 3.

*இவ்வகையதிருநாட்டிலெனைப்பலவூர்களுமென்று*
*மெய்வளங்களோங்கவருமேன்மையனவாங்கவற்றுட்*
*சைவநெறியேயுலகம்பாலிக்குந்தன்மையினாற்*
*றெய்வநெறிச்சிவம்பெருக்குந்திருவாமூர்திருவாமூர்*

தலத்தின்கண்விளங்கியவத்தனிப்பதியிலனைத்துவித
நலத்தின்கண்வழுவாதநடைமரபிற்குடிமாப்பண்
பிலக்கின்மனையொழுக்கத்தின்மேதக்கநிலைவேளாண்
குலத்தின்கண்வரும்பெருமைக்குறுக்கையர்தங்குடிவிளங்கும் 5

புகழனார்தமக்குரிமைப்பொருவில்குலக்குடியின்கண்
மகிழவருமணம்புணர்ந்தமாதினியார்மணிவயிற்றி
னிகழுமலர்ச்செங்கமலநிரையிதழினகவயினிற்
றிகழவருந்திருவனையதிலகவதியார்பிறந்தார் 6.

திலகவதியார்பிறந்துசிலமுறையாண்டகன்றதற்பின்
அலகில்கலைத்துறைதழைப்பவருந்தவத்தோர்நெறிவாழ
உலகின்வருமிருணீக்கியொளிவிளங்குகதிர்போல
மலருமருணீக்கியார்வந்தவதாரஞ்செய்தார் 7.

அந்நாளிற்றிலகவதியாருக்காண்டாறிரண்டின்
முன்னாகவொத்தகுலமுதல்வேளாண்குடித்தலைவர்
மின்னார்செஞ்சடையண்ணன்மெய்யடிமைவிருப்புடையார்
பொன்னாருமணிமௌலிப்புரவலன்பாலருளுடையார் 8.

அணங்கனையதிலகவதியார்தம்மையாங்கவர்க்கு
மணம்பேசிவந்தவரும்வந்தபடியறிவிப்பக்
குணம்பேசிக்குலம்பேசிக்கோதில்சீர்ப்புகழனார்
பணங்கொளரவகலல்குற்பைந்தொடியைமணநேர்ந்தார் 9.

கன்னிதிருத்தாதையார்மணமிசைவுகலிப்பகையார்
முன்னணைந்தாறிவிப்பவதுவைவினைமுடிப்பதன்முன்
மன்னவற்குவடபுலத்தோர்மாறேற்கமற்றவர்மேல்
அன்னவர்க்குவிடைகொடுத்தானவ்வினைமேலவரகன்றார் 10.

ஆயநாளிடையிப்பாலணங்கனையாடனைப்பயந்த
தூயகுலப்புகழனார்தொன்றுதொடுநிலையாமை
மேயவினைப்பயத்தாலேயிவ்வுலகைவிட்டகலத்
தீயவரும்பிணியுழந்துவிண்ணுலகிற்சென்றடைந்தார் 11.

மற்றவர்தாமுயிர்நீப்பமனைவியார்மாதினியார்
சுற்றமுடன்மக்களையுந்துகளாகவேநீத்துப்
பெற்றிமையாலுடனென்றும்பிரியாதவுலகெய்துங்
கற்புநெறிவழுவாமற்கணவனாருடன்சென்றார் 12.

வெம்முனைமேற்கலிப்பகையார்வேல்வேந்தனேவப்போய்
அம்முனையிற்பகைமுருக்கியமருலகமாள்வதற்குத்
தம்முடையகடன்கழித்தபெருவார்த்தைதலஞ்சாற்றச்
செம்மலர்மேற்றிருவனையதிலதவதியார்கேட்டார் 13.

அந்நிலையின்மிகப்புலம்பியன்னையுமத்தனுமகன்ற
பின்னையுநானுமைவணங்கப்பெறுதலினாலுயிர்தரித்தேன்
என்னையினித்தனிக்கைவிட்டேகுவீரெனில்யானு
முன்னமுயிர்நீப்பனெனமொழிந்திடரினழுந்தினார் 14.

தம்பியாருளராகவேண்டுமெனவைத்ததயா
உம்பருலகணையவுறுநிலைவிலக்கவுயிர்தாங்கி
அம்பொன்மணிநூறாங்காதனைத்துயிர்க்குமருடாங்கி
இம்பர்மனைத்தவம்புரிந்துதிலதவதியாரிருந்தார் 15.

மாசின்மனத்துயரொழியமருணீக்கியார்நிரம்பித்
தேசநெறிநிலையாமைகண்டறங்கள்செய்வாராய்க்
காசினிமேற்புகழ்விளங்கநிதியளித்துக்கருணையினால்
ஆசிலறச்சாலைகளுந்தண்ணீர்ப்பந்தருமமைப்பார் 16.

நில்லாதவுலகியல்புகண்டுநிலையாவாழ்க்கை
அல்லேனென்றறத்துறந்துசமயங்களானவற்றி
னல்லாறுதெரிந்துணரநம்பரருளாமையினாற்
கொல்லாமைமறைந்துறையுமமண்சமயங்குறுகினார் 17.

அங்கவருமமண்சமயத்தருங்கலைநூலானவெலாம்
பொங்குமுணர்வுறப்பயின்றேயந்நெறியிற்புலன்சிறப்பத்
துங்கமுழுவுடற்சமணர்சூழ்ந்துமகிழ்வாரவர்க்குத்
தங்களின்மேலாந்தருமசேனரெனும்பெயர்கொடுத்தார் 18.

அந்நெறியின்மிக்காரவரொழுகவான்றதவச்
செந்நெறியின்வைகுந்திலகவதியார்தாமுந்
தொன்னெறியின்சுற்றத்தொடர்பொழிபத்தூயசிவ
நன்னெறியேசேர்வதற்குநாதனருணண்ணுவார் 19.

போதபாசப்பிணிப்பொழியபிஞ்ஞகன்பால்
ஆராதவன்புபெறவாதரித்தவம்மடவார்
நீரார்கெடிலவடநீள்கரையினீடுபெருஞ்
சீரார்திருவதிகைவீரட்டானஞ்சேர்ந்தார் 20.

ஆண்டுதவவிளக்கனையார்சுடரொளியைத்தொழுதென்னை
ஆண்டருளுநீராகிலடியேன்பின்வந்தவனை
ஈண்டுவினைப்பரசமயக்குழிநின்றுமெடுத்தருள
வேண்டுமெனப்பலமுறையும்விண்ணப்பஞ்செய்தனரால் 21.

மன்னுதபோதனியார்க்குக்கனவின்கண்மழவிடையார்
உன்னுடையமனக்கவலையொழிநீயுன்னுடன்பிறந்தான்
முன்னமேமுனியாகியெனையடையத்தவமுயன்றான்.
அன்னவனையினிச்சூலைமடுத்தாள்வமெனவருளி 22.

பண்டுதவம்புரிதவத்துப்பழுதினளவிறைவழுவுந்
தொண்டரையாளத்தொடங்குஞ்சூலைவேதனைதன்னைக்
கண்டருநெற்றியாருளக்கடுங்கனல்போலடுங்கொடிய
மண்டுபெருஞ்சூலையவர்வயிற்றினிடைப்புக்கதால் 23.

புண்டலைவன்முருட்டமணர்புலர்ந்துசெயலறியாது
குண்டிகைநீர்மந்திரித்துக்குடிப்பித்துந்தணியாமை
கண்டுமிகப்பீலிகொடுகாலளவுந்தடவிடவும்
பண்டையினுநோவுமிகப்பரிபவத்தாலிடருழந்தார் 24.

கொல்லாதசூலைநோய்குடர்முடக்கித்தீராமை
யெல்லாருங்கைவிட்டாரிதுசெயலென்முன்பிறந்த
நல்லாள்பாற்சென்றியம்பினானுய்யும்படிகேட்டிங்
கல்லாகும்பொழுதணைவாயென்றுரொன்றறிவித்தான் 25.

என்றவன்முன்கூறுதலும்யானங்குன்னுடன்போந்து
நன்றறியாசமண்பள்ளிநண்ணுகிலேனெனுமாற்றஞ்
சென்றவனுக்குரையென்றுதிலகவதியார்மொழிய
அன்றவனுமீண்டுபோய்ப்புகுந்தபடியவர்க்குரைத்தான் 26.

அவ்வார்த்தைகேட்டலுமேயயர்வெய்தி யிதற்கினியான்
எவ்வாறுசெய்வனெனவீசரருள்கூடுதலால்
ஒவ்வாவிப்புன்சமயத்தொழியாவிந்துயரொழியச்
செவ்வாறுசேர்திலகவதியார்தாள்சேர்வனென 27.

வந்தணைந்துதிலகவதியாரடிமேலுறவணங்கி
நந்தமதுகுலஞ்செய்தநற்றவத்தின்பயனனையீர்
இந்தவுடற்கொடுஞ்சூலைக்கிடைந்தடைந்தேனினிமயங்கா
துய்ந்துகரையேறுநெறியுரைத்தருளுமெனவுரைத்து 28.

என்றபொழுதவரருளையெதிரேற்றுக்கொண்டிறைஞ்ச
நின்றதபோதனியாருநின்மலன்பேரருணினைந்து
சென்றுதிருவீரட்டம்புகுவதற்குத்திருக்கயிலைக்
குன்றுடையார்திருநீற்றையஞ்செழுத்தோதிக்கொடுத்தார் 29.

வேறு

நீற்றுணிறைவாகியமேனியுடனிறையன்புறுசிந்தையினேசமிக
மாற்றார்புரமாற்றியவேதியரைமருளும்பிணிமாயையறுத்திடுவான்
கூற்றாயினவாறுவிலக்குகிலீரெனநீடியகோதிறிருப்பதிகப்
போற்றாலுலகேழின்வருந்துயரும்போமாறெதிர்நின்றுபுகன்றனரால் 30.

திருச்சிற்றம்பலம்.

[திருவதிகை-வீரட்டானம்-பண்-கொல்லி.]

கூற்றாயினவாறுவிலக்ககிலீர்கொடுமைபலசெய்தனநானறியேன்
ஏற்றாயடிக்கேயிரவும்பகலும்பிரியாதுவணங்குவனெப்பொழுதுந்
தோற்றாதென்வயிற்றினகம்படியேகுடரோடுதொடக்கிமுடக்கியிட
வாற்றேனடியேனதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே

போர்த்தாயங்கோரானையினீருரிதோல்புறங்காடரங்காநடமாடவல்லா
யார்த்தானரக்கன்றனைமால்வரைக்கீழடர்த்திட்டருள்செய்தவதுகருதாய்
வேர்த்தும்புரண்டும்விழுந்துமெழுந்தாலென்வேதனையானவிலக்கியிடா
யார்த்தார்புனல்சூழதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே.

திருச்சிற்றம்பலம்.

மேவுற்றவிவ்வேலையினீடியசீர்வீரட்டமமர்ந்தபிரானருளப்,பாவுற்ற
லர்செந்தமிழின்சொல்வளம்பதிகத்தொடைபாடியபான்மையினால்,
நாவுக்கரசென்றுலகேழினுநின்னுமங்கணயப்புறநண்ணுகவென் ,
றியாவர்க்கும்வியப்புறமஞ்சுறைவானிடையேயொருவாய்மையெழுந்
ததுவே 31.

வேறு

இன்னதன்மையிலிவர்சிவநெறியினையெய்தி
மன்னுபேரருள்பெற்றிடர்நீங்கியவண்ணம்
பன்னுதொன்மையிற்பாடலிபுத்திரநகரிற்
புன்மையேபுரியமணர்தாங்கேட்டதுபொறாராய் 32.

வேறு

அடிகண்மாரெல்லாருமாகுலமாய்மிகவழிந்து
கொடிநுடங்குதிருவாயிற்புறத்தணைந்தாரெனக்கூற
வடிநெடுவேன்மன்னவனுமற்றவர்சார்பாதலினாற்
கடிதணைவானவர்க்குற்றதென்கொலெனக்கவன்றுரைத்தான் 33.

கடைக்காவலுடையார்கள்புகுதவிடக்காவலன்பா
னடையாடுந்தொழிலுடையார்நண்ணித்தாமெண்ணியவா
றுடையாராகியதருமசேனர்பிணியுற்றாராய்ச்
சடையானுக்காளாய்நின்சமயமழித்தாரென்றார் 34.

அருள்கொண்டவுணர்வின்றிநெறிகோடியறிவென்று
மருள்கொண்டமன்னவனுமந்திரிகடமைநோக்கித்
தெருள்கொண்டோரிவர்சொன்னதீயோனைச்செறுவதற்குப்
பொருள்கொண்டுவிடாதென்பாற்கொடுவாருமெனப்புகன்றான் 35.

நாமார்க்குங்குடியல்லோமென்றெடுத்துநான்மறையின்
கோமானைநதியினுடன்குளிர்மதிவாழ்சடையானைத்
தேமாலைச்செந்தமிழின்செழுந்திருத்தாண்டகம்பாடி
யாமாறுநீரழைக்குமடைவிலமென்றருள்செய்தார் 36·

பல்லவனுமதுகேட்டுப்பாங்கிருந்தபாயுடுக்கை
வல்லமணர்தமைநோக்கிமற்றவனைச்செய்வதினிச்
சொல்லுமெனவறந்துறந்துதமக்குறுதியறியாத
புல்லறிவோரஞ்சாதுநீற்றறையிலிடப்புகன்றார் 37·

வெய்யநீற்றறையதுதான்வீங்கிளவேனிற்பருவந்
தைவருதண்டென்றலணைதண்கழுநீர்த்தடம்போன்று
மொய்பொளிவெண்ணிலவலர்ந்துமுரன்றயாழொலியினதா
யையர்திருவடிநீழலருளாகிக்குளிர்ந்ததே 38·

ஒரெழுநாள்கழிந்ததற்பினுணர்விலமணரையழைத்துப்
பாருமினிநீற்றறையையெனவுரைத்தான்பல்லவனுங்
காரிருண்டகுழாம்போலுமுருவுடையகாரமணர்
தேருநிலையில்லாதார்நீற்றறையைத்திறந்தார்கள் 39·

ஆனந்தவெள்ளத்தினிடைமூழ்கியம்பலவர்
தேனுந்துமலர்ப்பாதத்தமுதுண்டுதெளிவெய்தி
யூனந்தானிலராகியுவந்திருந்தார்தம்மைக்கண்
டீனந்தங்கியதிலதாமென்னவதிசயமென்றார் 40·

நஞ்சுகலந்தூட்டிடவுநஞ்சமயத்தினில்விடந்தீர்
தஞ்சமுடைமந்திரத்தாற்சாதியாவகைதடுத்தான்
எஞ்சுட்லகையவற்கிலதேலெம்முயிருநின்முறையுந்
துஞ்சுவதிடமென்றார்சூழ்வினையின்றுறைநின்றார் 41.

மாபாவிக்கடையமணர்வாகீசத்திருவடியாங்
காபாலியடியவர்பாற்கடக்களிற்றைவிடுகென்னப்
பூபாலர்செயன்மேற்கொண்புலைத்தொழிலோனவர்தம்மேற்
கோபாதிசயமானகொலைக்களிற்றைவிடச்சொன்னான் 42.

அண்ணலருந்தவரேவந்தானைதம்மேல்வரக்கண்டு
விண்ணவர்தம்பெருமானைவிடையுவந்தேறும்பிரானைச்
சுண்ணவெண்சந்தனச்சாந்துதொடுத்ததிருப்பதிகத்தை
மண்ணுலகுய்யவெடுத்துமகிழ்வுடன்பாடுகின்றார் 43.

வஞ்சகர்விட்டசினப்போர்மதவெங்களிற்றினைநோக்கிச்
செஞ்சடைநீண்முடிக்கூத்தர்தேவர்க்குந்தேவர்பிரானார்
வெஞ்சுடர்மூவிலைச்சூலவீரட்டர்தம்மடியோநாம்
அஞ்சுவதில்லையென்றென்றேயருந்தமிழ்பாடியறைந்தார் 44.

ஆங்கதுகேட்டவரசனவ்வினைமாக்களைநோக்கித்
தீங்குபுரிந்தவன்றன்னைச்சேமமுறக்கொண்டுபோகிப்
பாங்கொருகல்லிலணைத்துப்பாசம்பிணித்தோர்படகில்
வீங்கொலிவேலையிலேற்றிவீழ்த்துமினென்றுவிடுத்தான் 45.

வேறு.

சொற்றுணைவேதியனென்னுந்தூய்மொழி
நற்றமிழ்மாலையாநமச்சிவாயவென்
றற்றமுன்காக்குமைந்தெழுத்தையன்பொடு
பற்றியவுணர்வினாற்பதிகம்பாடினார் 46.

பெருகியவன்பினர்பிடித்தபெற்றியால்
அருமலரோன்முதலமரர்வாழ்த்துதற்
கரியவஞ்செழுத்தையுமரசுபோற்றிடக்
கருநெடுங்கடலினுட்கன்மிதந்ததே 47.

தொழுதகைநாவினுக்கரசுதொண்டர்முன்
செழுந்திருப்பாதிரிப்புலியூர்த்திங்கள்வெண்
கொழுந்தணிசடையரைக்கும்பிட்டன்புற
விழுந்தெழுந்தருணெறிவிளங்கப்பாடுவார் 48.

வேறு.

ஈன்றாளுமாயெனக்கெந்தையுமாகியெனவெடுத்துத்
தோன்றாத்துணையாயிருந்தனன்றன்னடியோங்கட்கென்று
வான்றாழ்புனற்கங்கைவாழ்சடையானைமற்றெவ்வுயிர்கருஞ்
சான்றொருவனைத்தண்டமிழ்மாலைகள்சாத்தினரே 49.

புன்னெறியாமமண்சமயத்தொடக்குண்டுபோந்தவுடல்
தன்னுடனேயுயிர்வாழத்தரியேனென்றரிப்பதனுக்
கென்னுடையநாயகநின்னிலச்சினையிட்டருளென்று
பன்னுசெழுந்தமிழ்மாலைமுன்னின்றுபாடுவார் 50.

பொன்னார்ந்ததிருவடிக்கென்விண்ணப்பமென்றெடுத்து
முன்னாகியெப்பொருட்குமுடிவாகிநின்றவனைத்
தன்னாகத்துமைபாகங்கொண்டவனைச்சங்கரனை
நன்னாமத்திருவிருத்தநலஞ்சிறக்கப்பாடுதலும் 51.

நீடுதிருத்தூங்கானைமாடத்துநிலவுகின்ற
ஆடகமேருச்சிலையானருளாலோர்சிவபூத
மாடொருவரறியாமேவாகீசர்திருத்தோளிற்
சேடுயர்மூவிலைச்சூலஞ்சினவிடையினுடன்சாத்த 52.

ஆனாதசீர்த்தில்லையம்பலத்தேயாடுகின்ற
வானாறுபுடைபரக்குமலர்ச்சடையாரடிவணங்கி
ஊனாலுமுயிராலுமுள்ளபயன்கொளநினைந்து
தேனாருமலர்ச்சோலைத்திருப்புலியூர்மருங்கணைந்தார் 53.

வேறு.

பத்தனாய்ப்பாடமாட்டேனென்றுமுன்னெடுத்துப்பண்ணால்
அத்தவுன்னாடல்காண்பானடியனேன்வந்தவாறென்
றித்திறம்போற்றிநின்றேபின்றமிழ்மாலைபாடிக்
கைத்திருத்தொண்டுசெய்யுங்காதலிற்பணிந்துபோந்தார் 54.

வேறு.

பெரியபெருமாட்டியுடன்றோணிமீதுபேணிவீற்றிருந்தருளும் பிரா
ன்முன்னின்று, பரிவுறுசெந்தமிழ்மாலைபத்தியொடும்பார்கொண்டு
மூடியெனும்பதிகம்போற்றி, அரியவகைபுறம்போந்துபிள்ளையார்
தந்திருமடத்திலெழுந்தருளியமுதுசெய்து, மருவியநண்புறுகேண்
மையுறுநிறைநாள்போல்வளர்ந்தோங்கவுடன்பலநாள்வைகுநாளில் 55.

அத்தன்மையினிலரசும்பிள்ளையாருமளவளாவியமகிழ்ச்சியளவிலாத,
சித்தநெகிழ்ச்சியினோடுசெல்லுநாளிற் றிருநாவுக்கரசர்திருவுள்ளந்த
ன்னின், மைத்தழையுமணிமிடற்றார்பொன்னிநாட்டுமன்னியதானங்க
ளெல்லாம்வணங்கிப்போற்ற, மெய்த்தெழுந்த பெருங்காதல்பிள்ளையா
ர்க்குவிளம்புதலுமவருமதுமேவிநேர்வார் 56.

வேறு.

கருகாவூர்முதலாகக்கண்ணுதலோனமர்ந்தருளுந்
திருவாவூர் திருப்பாலைத்துறைபிறவுஞ்சென்றிறைஞ்சிப்
பெருகார்வத்திருத்தொண்டுசெய்துபெருந்திருநல்லூர்
ஒருகாலும்பிரியாதேயுள்ளுருகிப்பணிகின்றார் 57.

அப்பதியைச்சூழ்ந்ததிருப்பதியிலரனார்மகிழும்
ஒப்பரியதானங்களுள்ளுருகிப்பணிந்தணைவார்
மெய்ப்பொருடேர்நாவினுக்குவேந்தர்தாமேவினார்
செப்பருஞ்சீரப்பூதியடிகளார்திங்களூர் 58.

அந்தணரின்மேம்பட்டவப்பூதியடிகளார்
தந்தனையருடன்சாலைகூவல்குளந்தருதண்ணீர்ப்
பந்தர்பலவாண்டவரசெனும்பெயராற்பண்ணினமை
வந்தணைந்தவாகீசர்கேட்டவர்தம்மனைநண்ண 59.

திருநாவுக்கரசமுதுசெய்தருளமற்றவர்தம்
பெருநாமஞ்சாற்றியவப்பிள்ளைதனையழைத்தபின்பு
தருஞானத்திருமறையோர்தண்டலையின்வண்கதலிக்
குருநாளக்குருத்தரிந்துகொண்டுவரத்தனிவிட்டார் 60.

ஆங்கவனும்விரைந்தெய்தியம்மருங்குதாழாதே
பூங்கதலிக்குருத்தரியப்புகுமளவிலொருநாகந்
தீங்கிழைக்கவதுபேணான்றிருவமுதுசெய்தருள
ஓங்குகதலிக்குருத்துக்கொண்டொல்லைவந்தணைந்தான் 61.

அன்றவர்கண்மறைத்ததனுக்களவிறந்தகருணையாய்க்
கொன்றைநறுஞ்சடையார்தங்கோயிலின்முன்கொணர்வித்தே
யொன்றுகொலாமெனப்பதிகமெடுத்துடையான்சீர்பாடப்
பின்றைவிடம்போய்நீங்கிப்பிள்ளையுணர்ந்தெழுந்திருந்தான் 62.

எழும்பணியுமிளம்பிறையுமணிந்தவரையெம்மருங்குந்,தொழும்ப
ணிமேற்கொண்டருளுந்திருச்சோற்றுத்துறைமுதலாத்,தழும்புறு
கேண்மையினண்ணித்தானங்கள்பலபாடிச்,செழும்பழனத்திறை
கோயிற்றிருத்தொண்டுசெய்திருந்தார் 63.

பற்றொன்றிலாவரும்பாதகராகுமமணர்தம்பால்,உற்றபிணியொழிந்
துய்யப்போந்தேன்பெறலாவதொன்றே,புற்றிடங்கொண்டார்தந்
தொண்டர்க்குத்தொண்டாம்புண்ணியமென்,றற்றவுணர்வொடுமா
ரூர்த்திருவீதியுள்ளணைந்தார் 64.

காண்டமலிதடம்பொய்கைக்காழியர்கோனைஇணையுங்காதல்கேட்டு
வான்றுமணிப்புனற்புகலூர்நோக்கிவரும்வாகீசர்மகிழ்ந்துவந்தார்,
திரண்டுவருந்திருநீற்றுத்தொண்டர்குழாந்திறமுஞ்சேர்ந்தபோ
தில்,இரண்டுநிலவின்கடல்களொருழியணைந்தனபோலிசைந்த
வன்றே 65.

வேறு.

சீர்தருசெங்காட்டங்குடிநீடுதிருநள்ளா
றூர்தருசோலைசூழ்தருசாந்தையயவந்தி
வாரதிகழ்மென்முலையாளொருபாகன்றிருமருகல்
ஏர்தருமன்பாற்சென்றுவணங்கிபின்புற்றூர் 66

வேறு

அந்நாளிற்றமக்கேற்றதிருத்தொண்டினெறியாற்ற
மின்னார்செஞ்சடையண்ணன்மேவுபதியெனைப்பலவு
முன்னாகச்சென்றேத்திமுதல்வன்றாடொழுவதற்குப்
பொன்னாருமணிமாடப்பூம்புகலூர்தொழுதகன்றார் 67.

சார்ந்தார்தம்புகலிடத்தைத்தான்றோன்றிமாடத்துக்
கூர்ந்தார்வமுறப்பணிந்துகோதிறமிழ்த்தொடைபுனைந்து
வார்ந்தாடுஞ்சடையார்தம்பதிபலவும்வணங்கியுடன்
சேர்ந்தார்கடம்பெருமான்றிருவீழிமிழலையினை 68.

வேறு.

சீரின்விளங்குந்திருத்தொண்டரிருந்துசிலநாட்சென்றதற்பின்
மாரிசுருங்கிவளம்பொன்னிநதியும்பருவமாறுதலும்
நீரினியன்றவுணவருகிநிலவுமபலமன்னுயிர்களெல்லாம்
பாரின்மலிந்தவிலம்பாட்டிற்படர்கூர்வறுமைபரந்ததால் 69.

வையமெங்கும்வற்கடமாய்ச்செல்லவுலகோர்வருத்தமுற
நையுநாளிற்பிள்ளையார்தமக்குநாவுக்கரசினுக்குங்
கையின்மானுமழுவுமுடன்காணக்கனவிலெழுந்தருளிச்
செய்யசடையார்திருவீழிமிழலையுடையாரருள்செய்வார் 70.

காலநிலைமையாலுங்கள்கருத்தில்வாட்டமுறீரெனினும்
ஏலவுமைவழிபடுவார்க்களிக்கவளிக்கின்றோமென்று
கோலங்காணவெழுந்தருளிக்குலவும்பெருமையிருவர்க்கு
ஞாலமறியப்படிக்காசுவைத்தார்மிழலைநாயகனார் 71.

அல்லார்கண்டத்தண்டர்பிரானருளாற்பெற்றபடிக்காசு,பல்லாரியன்ற
வளம்பெருகப்பரமனடியாரானார்கள்,எல்லாமெய்தியுண்கவெனவிரண்
டுபொழுதும்பறைநிகழ்த்திச்,சொல்லாற்சாற்றிச்சோறிட்டார்துயர்
கூர்வறுமைதொலைத்திட்டார் 72.

பரவையோதக்கழிக்கானற்பாங்குநெருங்குமப்பதியில்
அரவச்சடையந்தணனாரையகிலமறைகளர்ச்சனைசெய்
துரவக்கதவந்திருக்காப்புச்செய்தவந்நாண்முதலிந்நாள்
வரையுமடைத்தேநிற்கின்றமணிநீள்வாயில்வணங்குவார் 73.

ஆங்கப்படியையறிந்தருளியாழித்தோணிபுரத்தரசர்
ஓங்கும்வேதமருச்சனைசெயும்பர்பிரானையுள்புக்குத்
தேங்காதிருவோநேரிறைஞ்சத்திருமுன்கதவந்திருக்காப்பு
நீங்கப்பாடுமெய்ப்பரெனநீடுந்திருநாவுக்கரசர் 74.

ஆண்டவரசும்பிள்ளையாருடனேயங்கணினிதமர்ந்து
பூண்டகாதல்பொங்கியெழவாய்மூரடிகளடிபோற்றி
மூண்டவன்பின்மொழிமாலைசாத்திஞானமுனிவரொடு
மீண்டுவந்துதிருமறைக்காட்டெய்திவிமலர்தாள்பணிந்தார் 75.

சோலைமறைக்காட்டமர்ந்தருளுஞ்சோதியருள்பெற்றகன்றுபோய்,
வேலைவிடமுண்டவர்வீழிமிழலைமீண்டுஞ்செல்வனென,ஞாலநிகழ்ந்த
நாகைக்காரோணம்பிறவும்பணிந்தணைவார்,சாலுமொழிவண்டமிழ்
பாடித்தலைவர்மிழலைவந்தடைந்தார் 76.

பூவிற்பொலியும்புனற்பொன்னிக்கரைபோய்ப்பணிவார்பொற்பமை
ந்த,ஆவுக்கருளுமாவடுதண்டுறையார்பாதமணைந்திறைஞ்சி,நாவுக்கர
சர்ஞானபோனகர்க்குச்செம்பொனாயிரமும்,பாவுக்களித்ததிறம்போ
ற்றிப்போந்துபிறவும்பணிகின்றார் 77.

பொங்குபுனலார்பொன்னியினிலிரண்டுகரையும்பொருவிடையார்
தங்குமிடங்கள்புக்கிறைஞ்சித்தமிழ்மாலைகளுஞ்சாத்திப்போ
யெங்குநிறைந்தபுகழாளரீறிறொண்டரெதிர்கொள்ளச்
செங்கண்விடையார்திருவானைக்காவின்மருங்குசென்றணைந்தார் 78.

சிலந்திக்கருளுங்கழல்வணங்கிச்செஞ்சொன்மாலைபலபாடி
இலங்குசடையாரெறும்பியூர்மலையுமிறைஞ்சிப்பாடிப்பின்
மலர்ந்தசோதித்திருச்சிராப்பள்ளிமலையுங்கற்குடியு
நலங்கொள்செல்வத்திருப்பராய்த்துறையுந்தொழுவானண்ணினார் 78.

மற்றப்பதிகண்முதலானமருங்குள்ளனவுங்கைதொழுது
பொற்புற்றமைந்ததிருப்பணிகளசெய்துபதிகங்கொடுபோற்றி
உற்றவருளாற்காவிரியையேறியொன்னார்புரமெரியச்
செற்றசிலையார்திருப்பைஞ்ஞீலியினைச்சென்றுசேர்கின்றார் 80.

வழிபோம்பொழுதுமிகவிளைத்துவருத்தமுறநீர்வேட்கையொடும்
அழிவாம்பசிவந்தணைந்திடவுமதற்குச்சித்தமலையாதே
மொழிவேந்தருமுன்னெழுந்தருளமுருகார்சோலைப்பைஞ்ஞீலி
விழியேந்தியநெற்றியினார்தந்தொண்ட[illegible]ருத்தமீட்பாராய் 81.

உடையவர்கோவணமொன்றுங்குறைவிலர்
படைகொள்பாரிடஞ்சூழ்ந்தபைஞ்ஞீலியார்
சடையிற்கங்கைதரித்தசதுரரை
அடையவல்லவர்க்கில்லையவலமே 2.

விழுதசூலத்தன்வெண்மழுவாட்படைக்
கழுதுதுஞ்சிருள்காட்டகத்தாடலான்
பழுதொன்றின்றிப்பைஞ்ஞீலிப்பரமனைத்
தொழுதுசெல்பவர்தம்வினைதூளியே 3.

ஒன்றிமாலும்பிரமனுந்தம்மிலே
நின்றசூழலறிவரியானிடஞ்
சென்றபாரிடமேத்துபைஞ்ஞீலியுள்
என்றுமேவியிருந்தவடிகளே 4.

வேழத்தின்னுரிபோர்த்தவிகிர்தனார்
தாழச்செஞ்சடைமேற்பிறைவைத்தவர்
தாழைத்தண்பொழில்சூழ்ந்தபைஞ்ஞீலியார்
யாழின்பாட்டையுகந்தவடிகளே 5.

குண்டுபட்டுக்குறியறியாச்சமண்
மிண்டரோடுபடுத்துய்யப்போந்துநான்
கண்டங்கார்வயல்சூழ்ந்தபைஞ்ஞீலியெம்
அண்டவாணனடியடைந்துய்ந்தனே 6.

வரிப்பையாடரவாட்டிமதகரி
யுரிப்பைமூடியவுத்தமனுறை
திருப்பைஞ்ஞீலிதிசைதொழுவார்கள்போ
யிருப்பர்வானவரோடினிதாகவே 7.

கோடல்கோங்கம்புறவணிமுல்லைமேற்
பாடல்வண்டிசைகேட்கும்பைஞ்ஞீலியார்
பேடுமாணும்பிறரறியாததோர்
ஆடுநாகமசைத்தவடிகளே 8.

காருலாமலர்க்கொன்றையந்தாரினன்
வாருலாமுலைமங்கையோர்பங்கினன்
தேருலாம்பொழில்சூழ்ந்தபைஞ்ஞீலியெம்
மூர்விலாவமுதையடைந்துய்ம்மினே 9.

தருக்கிச்சென்றுதட்டவரைப்பற்றலும்
நெருக்கியூன்றநினைந்துசிவனையே
யரக்கன்பாடவருளுமெம்மானிடம்
இருக்கைஞீலியென்பார்க்கிடரில்லையே 10.

திருச்சிற்றம்பலம்.

நாதர்மருவு திருமலைகளும்பதிகள்பலமிகவுங்
காதல்கூரச்சென்றிறைஞ்சிக்கலந்தவிசைவண்டமிழ்பாடி
மாதோர்பாகரருளாலேவடபாலேக்கிவாகீசர்
ஆதிதேவரமர்ந்ததிருவண்ணாமலையைநண்ணினார் 88.

பணியார்வேணிச்சிவபெருமான்பாதம்போற்றிப்பணிசெயுநாண்
மணியார்கண்டத்தெம்பெருமான்மண்மேன்மகிழுமிடமெங்குந்
தணியாக்காதலுடன்சென்றுவணங்கித்தக்கபணிசெய்வார்
அணியார்தொண்டைத்திருநாட்டிலருளாலணைவாராயினார் 89.

திருக்கச்சியேகம்பம்பணிந்தேத்தித்திகளார்
நெருக்கச்செஞ்சடைக்கணிந்தார்நீடுபதிதொழுநினைவார்
வருக்கைச்செஞ்சுளைபொழிதேன்வயல்விளைக்குநாட்டிடைப்போய்ப்
பருக்கைத்திண்களிற்றுரியார்கழுக்குன்றின்பாங்கணைந்தார் 90.

திருநாவுக்கரசருமத்திருவொற்றியூரமர்ந்த
பெருநாகத்திண்சிலையார்கோபுரத்தையிறைஞ்சிப்புக்
கொருஞானத்தொண்டருடனுருகிவலங்கொண்டடியார்
கருநாமந்தவிர்ப்பாரைக்கைதொழுதுமுன்வீழ்ந்தார் 91.

யெழுதாதமறையளித்தவெழுத்தறியும்பெருமானைத்
தொழுதார்வமுறநிலத்திற்றோய்ந்தெழுந்தேயங்கமெலா
முழுதாயபரவசத்தின்முகிழ்த்தமயிர்க்கான்மூழ்க
விழுதாரைக்கண்பொழியவிதிர்ப்புற்றுவிம்மினார் 92.

திருப்பாசூர்கசெய்திச்சிந்தையினில்வந்தூறும்
விருப்பார்வமேற்கொள்ளவேயிடங்கொண்டுலகுய்ய
இருப்பாரைப்புரமூன்றுமெரித்தருளவெடுத்ததனிப்
பொருப்பார்வெஞ்சிலையாரைத்தொழுதெழுந்துபோற்றுவார் 93.

பல்பதியுநெடுங்கிரியும்படர்வனமுஞ்சென்றடைவார்
செல்கதிமுன்னளிப்பார்தந்திருக்காரிக்கரைபணிந்து
தொல்கலையின்பெருவேந்தர்தொண்டர்கள்பின்னும்பர்குழா
மல்குதிருக்காளத்திமாமலைவந்தெய்தினார் 94.

வேறு.

அங்கண்மாமலைமேன்மருந்தைவணங்கியாரருளான்மிகப்
பொங்குகாதலினுத்தரத்திசைமேல்விருப்பொடுபோதுவார்
துங்கமால்வரைகானியாறுதொடர்ந்தநாடுகடந்தபின்
செங்கண்மால்விடையண்ணன்மேவுதிருப்பருப்பதமெய்தினார் 95.

அம்மருங்குகடந்துபோமவரார்கொள்சூலவயிற்படைச்
செம்மல்வெண்கயிலைப்பொருப்பைநினைந்தெழுந்ததோர்சிந்தையால்
எம்மருங்குமோர்காதலின்றியிரண்டுபாலும்வியந்துளோர்
கைம்மருங்கணையுந்தெலுங்குகடந்துகன்னடமெய்தினார் 96.

மார்பமுந்தசைநைந்துசிந்திவருந்தவென்புமுரிந்திட
நேர்வருங்குறைநின்றசிந்தையினேசமீசனைநேருநீ
டார்வமங்குயிர்கொண்டுகைக்குறடம்படங்கவுமுன்கொடச்
சேர்வரும்பழுவம்புரண்டுபுரண்டுசென்றனர்செம்மையோர் 97.

வேறு.

அன்னதன்மைபார்கயிலையையணைவதற்கருளார்
மன்னுநீந்தமிழ்புவியின்மேற்பின்னையும்வழுத்த
நன்னெடும்புனற்றடமுமொன்றுடன்கொடுநடந்தார்
பன்னகம்புனைபரமரோர்முனிவராம்படியால் 98.

கயிலைமால்வரையாவதுகாசினிமருங்கு
பயிலுமானிடப்பான்மையோரடைவதற்கெளிதோ
யயில்கொள்வேற்படையமரருமணுகுதற்கரிதால்
வெயில்கொள்வெஞ்சுரத்தென்செய்தீர்வந்தெனவிளம்பி 99.

அண்ணலேயெனையாண்டுகொண்டருளியவமுதே
விண்ணிலேமறைந்தருள்புரிவேதநாயகனே
கண்ணினாற்றிருக்கயிலையிலிருந்தநின்கோல
நண்ணிநான்றொழநயந்தருள்புரியெனப்பணிந்தார் 100.

தொழுதெழுந்தநற்றொண்டரைநோக்கிவிண்டலத்தில்
எழுபெருந்திருவாக்கினாலிறைவரிப்பொய்கை
முழுகிநம்மைநீகயிலையிலிருந்தவம்முறைமை
பழுதில்சீர்த்திருவையாற்றிற்காணெனப்பணித்தார் 101.

ஏற்றினாருடலைமிசைக்கொண்டெழுந்திறைஞ்சி
வேற்றுமாகிவிண்ணாகிநின்றார்மொழிவிரும்பி
யாற்றல்பெற்றவரண்ணலாரஞ்செழுத்தோதிப்
யாற்றடம்புனற்பொய்கையின்மூழ்கினார்பணியால் 102.

மிடையுநீள்கொடிவீதிகள்விளங்கியவையா
றுடையநாயகர்சேவடிபணியவந்துறுவார்
அடையவப்பதிநிற்பவுஞ்சரிப்பவுமான
புடையமர்ந்ததந்துணையொடும்பொலிவனகண்டார் 103.

வெள்ளிவெற்பின்மேன்மரகதக்கொடியுடன்விளங்குந்
தெள்ளுபேரொளிப்பவளவெற்பெனவிடப்பாகங்
கொள்ளுமாமலையாளுடன்கூடவீற்றிருந்த
வள்ளலாரைமுன்கண்டனர்வாக்கின்மன்னவனார் 104.

## திருத்தாண்டகம்.

### திருச்சிற்றம்பலம்.

ஓசையொலியெலாமானாய்நீயேயுலகுக்கொருவனாய்நின்றாய்நீயே
வாசமலரெலாமானாய்நீயேமலையான்மருகனாய்நின்றாய்நீயே
பேசப்பெரிதுமினியாய்நீயேபிரானாயடியன்மேல்வைத்தாய்நீயே
தேசவிளக்கெலாமானாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதி.

கயிலைமால்வரையாவதுகாசினிமருங்கு
பயிலுமானிடப்பான்மையோரடைவதற்கெளிதோ
யயில்கொள்வேற்படையமரருமணுகுதற்கரிதால்
வெயில்கொள்வெஞ்சுரத்தென்செய்தீர்வந்தெனவிளம்பி 99.

அண்ணலேயெனையாண்டுகொண்டருளியவமுதே
விண்ணிலேமறைந்தருள்புரிவேதநாயகனே
கண்ணினாற்றிருக்கயிலையிலிருந்தநின்கோல
நண்ணிநான்றொழநயந்தருள்புரியெனப்பணிந்தார் 100.

தொழுதெழுந்தநற்றொண்டரைநோக்கிவிண்டலத்தில்
எழுபெருந்திருவாக்கினாலிறைவரிப்பொய்கை
முழுகிநம்மைநீகயிலையிலிருந்தவம்முறைமை
பழுதில்சீர்த்திருவையாற்றிற்காணெனப்பணித்தார் 101.

ஏற்றினாருடலைமிசைக்கொண்டெழுந்திறைஞ்சி
வேற்றுமாகிவிண்ணாகிநின்றார்மொழிவிரும்பி
யாற்றல்பெற்றவரண்ணலாரஞ்செழுத்தோதிப்
யாற்றடம்புனற்பொய்கையின்மூழ்கினார்பணியால் 102.

மிடையுநீள்கொடிவீதிகள்விளங்கியவையா
றுடையநாயகர்சேவடிபணியவந்துறுவார்
அடையவப்பதிநிற்பவுஞ்சரிப்பவுமான
புடையமர்ந்ததந்துணையொடும்பொலிவனகண்டார் 103.

வெள்ளிவெற்பின்மேன்மரகதக்கொடியுடன்விளங்குந்
தெள்ளுபேரொளிப்பவளவெற்பெனவிடப்பாகங்
கொள்ளுமாமலையாளுடன்கூடிவீற்றிருந்த
வள்ளலாரைமுன்கண்டனர்வாக்கின்மன்னவனார் 104.

## திருத்தாண்டகம்.

### திருச்சிற்றம்பலம்.

ஓசையொலியெலாமானாய்நீயேயுலகுக்கொருவனாய்நின்றாய்நீயே
வாசமலரெலாமானாய்நீயேமலையான்மருகனாய்நின்றாய்நீயே
பேசப்பெரிதுமினியாய்நீயேபிரானாயடியன்மேல்வைத்தாய்நீயே
தேசவிளக்கெலாமானாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதி.

ஆருமறியாவிடத்தாய்நீயேயாகாசந்தேரூர்வல்லாய்நீயே
பேரும்பெரியவிலங்கைவேந்தன்பெரியமுடிபத்திறுத்தாய்நீயே
யூரும்புரமூன்றுமட்டாய்நீயேயொண்டாமரையானுமாலுங்கூடித்
தேருமடியென்மேல்வைத்தாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோ[தீ]

திருச்சிற்றம்பலம்.

மாதர்ப்பிறைக்கண்ணியானைமலையான்மகளொடுமென்றுங்
கோதறுதண்டமிழ்சசொல்லாற்குலவுதிருப்பதிகங்கள்
வேதமுதல்வனையாற்றில்விரவுஞ்சராசரமெல்லாங்
காதற்றுணையொடுங்கூடக்கண்டேனெனப்பாடிநின்றார் 10[6]

பண்—காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மாதர்ப்பிறைக்கண்ணியானைமலையான்மகளொடும்பாடிப்
போதொடுநீர்சுமந்தேத்திப்புகுவாரவர்பின்புகுவே
னியாதுஞ்சுவடுபடாமலையாறடைகின்றபோது
காதன்மடப்பிடியோடுங்களிறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன்.

வளர்மதிக்கண்ணியினானைவார்குழலாளொடும்பாடிக்
களவுபடாததோர்காலங்காண்பான்கடைக்கணிக்கின்றேன்
னளவுபடாததோரன்போடையாறடைகின்றபோது
இளமணநாகுதழுவியேறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன்.

திருச்சிற்றம்பலம்.

நீடியவப்பதிநின்றுநெய்த்தானமேமுதலாக
மாடுயர்தானம்பணிந்துமழுபாடியானைவணங்கிப்
பாடியசெந்தமிழ்மாலைபகர்ந்துபணிசெய்துபோற்றித்
தேடியமாலுக்கரியார்திருப்பூந்துருத்தியைச்சேர்ந்தார் 107

பல்வகைத்தாண்டகத்தோடும்பரவுந்தனித்தாண்டகமும்
அல்லலறுப்பவர்தானத்தடைவுதிருத்தாண்டகமுஞ்
செல்கதிகாட்டிடப்போற்றுந்திருவங்கமாலையுமுள்ளிட்
டெல்லையில்பன்மைத்தொகையுமியம்பினரேத்தியிருந்தார் 10[8]

பொன்னிவலங்கொண்டதிருப்பூந்துருத்தியவரிருப்பக்
கன்மனத்துவல்லமணர்தமைவாதிற்கட்டழித்துக்
தென்னவன்கூனிமிர்த்தருளித்திருநீற்றினொளிகண்டு
மன்னியசீர்ச்சண்பைநகர்மறையவனார்வருகின்றார் 109.

காழியர்கோன்வருமெல்லைகலந்தெய்திக்காதலித்தார்
சூழுமிடைந்திடுநெருக்கிற்காணாமேதொழுதருளி
வாழியவர்தமைத்தாங்குமணிமுத்தின்சிவிகையினைத்
தாழுமுடலிதுகொண்டுதாங்குவன்யானெனத்தரித்தார் 110.

திருஞானமாமுனிவரசிருந்தபூந்துருத்திக்
கருகாகவெழுந்தருளியெங்குற்றாரப்பரென
உருகாநின்றும்மடியேனும்மடிகடாங்கிவரும்
பெருவாழ்வுவந்தெய்தப்பெற்றிங்குற்றேனென்றார் 111.

பிள்ளையாரதுகேளாப்பெருகுவிரைவுடனிழிந்தே
யுள்ளமிகுபதைப்பெய்தியுடையவரசினைவணங்க
வள்ளலார்வாகீசரவர்வணங்காமுன்வணங்கத்
துள்ளுமான்மறிக்கரத்தார்தொண்டரெலாந்தொழுதார்த்தார் 112.

கழுமலக்கோன்றிருநாவுக்கரசருடன்கலந்தருளிச்
செழுமதியந்தவழ்சோலைப்பூந்துருத்தித்திருப்பதியின்
மழுவினொடுமானேந்துதிருக்கரத்தார்மலர்த்தாள்கள்
தொழுதுருகியின்புற்றுத்துதிசெய்தங்குடனிருந்தார் 113.

பண்புடையபாண்டிமாதேவியாரதம்பரிவு
நண்புடையகுலச்சிறையார்பெருமையுஞானத்தலைவர்
எண்பெருகவுரைத்தருளவெல்லையில்சீர்வாகீசர்
மண்குலவுதமிழ்நாடுகாண்பதற்குமனங்கொண்டார் 114.

ஆண்டவரசங்கணர்சீரருள்பெற்றப்பதிநின்றும்
பாண்டிநாட்டெழுந்தருளும்பான்மையராய்த்தென்றிசைபோய்க்
காண்டகையதிருப்புத்தூர்பணிந்தேத்திக்கதிர்மதியந்
தீண்டுகொடிமதின்மதுரைத்திருவாலவாய்சேர்ந்தார் 115.

சீர்திகழும்பாண்டிமாதேவியார்திருமேனி
சேரவருளுண்டயதனாற்கூனிமிர்ந்ததென்னவனார்
யார்பரவுங்குலச்சிறையார்வாகீசர்தமைப்பணிவுற்
றூர்திலாக்காதல்மிகவடிபோற்றவங்கிருந்தார் 11

தேம்பொழியுஞ்செந்தமிழ்நாட்டினிலெங்குஞ்சென்றிறைஞ்சிப்
பாம்பணிவார்தமைப்பணிவார்பொன்னிநாடதுவணைந்து
வாம்புனல்சூழ்வளநகர்கள்பின்னும்போய்வணங்கியே
பூம்புகலூர்வந்தடைந்தார்பொய்ப்பாசம்போக்குவார் 11

செம்பொன்னுநவமணியுஞ்சேண்விளங்கவாங்கவையு
மும்பாபிரான்றிருமுன்றிலுருள்பருக்கையுடனொக்க
வெம்பெருமான்வாகீசருழவாரத்தினிலேந்தி
வம்பலர்மென்பூங்கமலவாவியினிற்புகவெறிந்தார் 11

புல்லோடுங்கல்லோடும்பொன்னோடுமணியோடும்
சொல்லோடும்வேறுபாடிலாநிலைமைதுணிந்திருந்த
நல்லோர்முன்றிருப்புகலூர்நாயகனார்திருவருளால்
வில்லோடுநுதன்மடவார்விசும்பூடுவந்திழிந்தார் 119

இம்மாயப்பவத்தொடக்காமிருவினைக்கட்டினைநோக்கி
யும்மாலிங்கென்னகுறையுடையேன்யான்றிருவாரூர்
அம்மானுக்காளானேனலையேன்மினீரென்று
பொய்ம்மாயப்பெருங்கடலுளெனுந்திருத்தாண்டகம்புகன்றார் 120

மன்னியவந்தக்கரணமருவுதலைப்பாட்டினாற்
றன்னுடையசரணானதமியேனைப்புகலூர
னென்னையினிச்சேவடிக்கீழிருத்திடுமென்றெழுகின்ற
முன்னுணர்வின்முயற்சியினாற்றிருவிருத்தம்பலமொழிந்தார் 121

மண்முதலாமுலகேத்தமன்னுதிருத்தாண்டகத்தைப்
புண்ணியாவுன்னடிக்கேபோதுகின்றேனெனப்புகன்று
நண்ணரியசிவானந்தஞானவடிவேயாகி
யண்ணலார்சேவடிக்கீழாண்டவரசமர்ந்திருந்தார்

வானவர்கண்மலர்மாரிமண்ணிறையவிண்ணுலகின்
மேனிறைந்தவைந்துபேரியவொலியுமிசைஞான்றுமுதல்
யோனிகளாயினவெல்லாமுண்ணிறைந்தபெருமகிழ்ச்சி
தானிறைந்தசித்திரையிற்சதயமாந்திருநாளில். 123.

அடியனேனுதரவாலாண்டவரசின்சரிதப்
படியையானறிந்தபடிபகர்ந்தேனப்பரமுனிவன்
கடிமலர்மென்சேவடிகள் கைதொழுதுகுலச்சிறையார்
முடிவில்புகழ்த்திருத்தொண்டின்முயற்சியினைமொழிகின்றேன் 124.

திருச்சிற்றம்பலம்.

திருநாவுக்கரசுசுவாமிகள்புராணம் முற்றிற்று.



92'

சங்கரநயினர்கோவில், சைவசித்தாந்த சபைப்
பிரசுரம் 3.

உ

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத மந்திரங்களே வேண்டும்.

---



இயற்றியவர்

ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை.

---

சங்கரநயினார்கோவில், சைவசித்தாந்த சபைப் பிரசுரம் 3.

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்டதேசிகன் திருவடி வாழ்க.

---

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத மந்திரங்களே வேண்டும்.

இது

சங்கரநயினார்கோவில்

சைவசித்தாந்த சபைத் துணைத்தலைவர்

**சித்தாந்த பண்டித பூஷணம்**

**சிவஸ்ரீ ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளையவர்களால்**

இயற்றி

தென்காசி

ஸ்ரீ சண்முகம் அச்சகத்தில்

அச்சிடப்பட்டது.

1954.

விலை அணா 0—6—0.
தபாற் கூலி வேறு.

இப்புத்தகம் கிடைக்கும் இடங்கள்:—

1. **ஆ. அம்மையப்ப பிள்ளை,**
மெய்கண்டான் நிலையம்,
திரிபுரசுந்தரியம்மன் கோவில் மேலத்தெரு,
**பேட்டை** P. O. (திருநெல்வேலி ஜில்லா)

2. **S. ராஜகோபாலன்,**
பொருட் காப்பாளர்,
சைவ சித்தாந்த சபை,
**சங்கரநயினார்கோவில்** P. O. (திருநெல்வேலி ஜில்லா)

உ

சிவமயம்.

# முன்னுரை.

இக்காலத்தில் தமிழ் நாட்டின் ஆலயங்களில் தமிழிலே அர்ச்சனை வேண்டுமென்று ஒரு சிலரால் பிரசங்கிக்கப்பட்டு வருகிறது. அவ்வர்ச்சனை சைவவுலகுக்குச் சாதகமா? பாதகமா? என்று ஆசிரியர் திரு. ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளையவர்களை உசாவினோம். அது நாத்திகத்துக்கே சாதகம், சைவவுலகுக்குப் பாதகமே என்று அவர்கள் எடுத்து விளக்கினார்கள். அவ்விளக்கத்தை ஒரு நூலாக எழுதித்தரும்படி வேண்டினோம். அதற்கிசைந்து 'சைவாலயங்களில் சம்ஸ்கிருத மந்திரங்களே வேண்டும்' என்ற இந் நூலை அவர்கள் ஆக்கித் தந்தார்கள்.

இந்நூலாசிரியரவர்களைத் தமிழகச் சைவப்புலவர் பெருமக்கள் நன்கறிவர். இவர்கள் திருநெல்வேலிப் பேட்டையில் தோன்றிச் சித்தாந்த பண்டித பூரணமாய் விளங்கிச் சங்கரன்-கோவிலில் தங்கி மக்களுக்குச் சைவத்துறையை உணர்த்தி வருகிறார்கள். சம்ஸ்கிருதம், தமிழ், ஆங்கிலம் இப்புலமையிற் சிறந்தவர்கள். மேதக்க நூலுரைகள் பல ஆக்கி வெளியிட்டிருக்கிறார்கள். சுமார் பத்து வருடங்களுக்கு முன்பே தம் 'சுயமரியாதையியக்கச் சூறாவளி'யால் கருஞ்சட்டையினருக்குச் சாட்டையடி கொடுத்திருக்கிறார்கள். திருவாவடுதுறை யாதீனமாகிய சைவ ஞான ராஜதானியில் அவ்வாதீன மஹாவித்வானாயிருந்த உயர்திரு. வி. சிதம்பர ராமலிங்க பிள்ளையவர்களின் பிரதான சிஷ்யர். இப்போது எங்களுக்குக் குருவாக விளங்கி வருகிறார்கள்.

வேத சிவாகமங்களே முதல் நூல்கள். சைவம் அல்லால் மற்றொன்றும் இல்லை. ஒவ்வொரு சைவனும் இவ்வுண்மையை உணர்க. கடைப்பிடிக்க. அவன் தன் சமய வழிபாடுகளிற் சிறந்து விளங்குக. சமய சமரசமென்பது சமயக்கண்ணில் மண்போடுவதே யென்பதை அறிந்து விலகுக. பிற சமயங்களைத் தூற்றற்க இவை இவ் வாசிரியரவர்களின் விருப்பம். இது இந்நூலில் நன்றாக விளக்கப்பட்டிருக்கிறது. இந்நூலைச் சைவத் [illegible] மன் [illegible]

சமயக் கண்கொண்டு படித்துணர்வதே முறை. ஆனால் இந்நூலிற் குறிக்கப்பட்டுள்ள நவீனர் இந்நூலைக் கண்டதும் வேங்கையெனச் சீறினுஞ் சீறுவர். அவரும் பொறுமையோடு இந்நூலைப் படிக்கட்டும். தம் கருத்தை அவர் மாற்றிக் கொண்டு திருந்துவது திண்ணம்.

சைவசமய வளர்ச்சியில் உத்வேகங்கொண்ட இளைஞர்களுக்குச் சைவசமயப் போர்வையில் மறைந்து திரிகிற தமிழ் வெறியர்களை இந்நூல் காட்டிக்கொடுக்கும். T. S. ஸ்ரீபால் என்பவர் அறம் என்ற போர்வையில் மறைந்து நின்று தாம் எழுதிய 'எம்மான் கோயில்' என்ற சுவடியில் சைவாசிரிய னொருவனையும் சைவ மாணவனொருவனையும் (வைணவ மாணவனொருவனையும்) கற்பித்து அவ்வாசிரியனைக் கொண்டு அம்மாணவனுக்குச் சமண சமயத்தைப் போதிக்கச் செய்து அவ்விருவரையும் (அவ்வைணவ மாணவனையும்) சமணப் படுகுழியில் தள்ளிவிடுகிறார். அதுபோல அந்நவீனரும் சைவசமயப்போர்வையில் மறைந்து நின்று சைவ மக்களுக்குத் தமிழ்வெறியை யூட்டி அவர்களைச் சைவசமயத்துக்கு விலக்காக்கி வருகின்றனர். அந்தப் பால் 'தமிழகத்தின் வரலாற்றை ஆராய்வதாயின் ஜைன சமயமே தமிழகம், தமிழகமே ஜைன சமயம் என்றுதான் கூறவேண்டும்........' என்று எழுதியுள்ளார் அச்சுவடிக்குப் பாராட்டுரை தந்த எஸ். எஸ். அருண-கிரிநாதர் அச்சுவடியிற் கண்ட ஆசிரியன் போன்று கற்பனை புருஷரல்லர். அவர் பெயரைப் பார்த்தால் அவர் சைவ சமயியாகத் தான் பிறந்தவராயிருக்க வேண்டும். அப்படியிருந்தும் அவர் தமிழ் வெறி வயப்பட்டு உண்மையாகவே அச்சமணக்குழியி லாழ்ந்தார். அங்ஙனமே சைவத்திற் பிறந்து அந்நவீனரால் அச்சமயத்துக்கு விலக்காக்கப்பட்டுத் தமிழ்வெறியராய்ப் போனவரும் ஏன் அந்நிய சமயங்களைப் பற்றமாட்டார்? தமிழர் சமயமென்று சொன்னாற் போதும். அது நாத்திகமே யாயினுஞ் சரி, வேறெதுவாயினுஞ் சரி, அதைத் தழுவிக்கொள்வர் அவ்வெறியர்கள். அப்படிச் சைவமக்களை அந்நவீனர் பதங்குலைத்து வருகிற கொடுமையையும் அவ்விளைஞர்கள் இந்நூலில் விளங்கக் காணலாம். அவர்களின் பிற்காலச் சைவப்பற்றுக்கு இந்நூல் பெரிதும் உதவியாகும்.

சைவ சமயச் செல்வர்கள் அகில லோகங்களிலும் உள்ளார் என்பதை 'உவராழி சூழ்கிடந்த விருநிலத்திற் பாதலத்தி லும்பர் நாட்டிற் - சிவனோடுந் தரித்தவர்மற் றெவருளரங் கவர்மலர்த்தாள் சென்னி சேர்ப்பாம்' எனவருங் காசிகண்டச் செய்யுளிற் காண்க. அவர்களனைவருந் தம்முள் உரையாடிக் கோடற்கு இந்நூலில் விளக்கியபடி சமஸ்கிருதமே பொது மொழியாயிருந்து உதவிக் கொண்டுவர முடியும். தோத்திரங்கள் வேறு, மந்திரங்கள் வேறு என்பதை 'மன்பெருமா மறைமொழிகள் மாமுனிவர் மகிழ்ந் துரைக்கு - மின்பமொழித் தோத்திரங்கள் மந்திரங்க ளியாவையினு - முன்பிருந்து மற்றவன்றன் முகமலர வகமெகிழ்ந்த - வன்பினிணைத் தெனையல்லா தறிவுறு மொழியில்ல' என்ற பெரிய புராணத் திருப்பாட்டு அறிவுறுத்துகிறது. ஆகையால் தோத்தி ரங்களை மந்திரங்களாகக் கொள்ளலாமென்பது அந்தப் பிரமா ணத்துக்கு மாறுபட்டதாகும்.

இந்நூலின் இறுதியில் இணைக்கப்பட்டுள்ள சிறந்த கட்டுரை வரைந்தனுப்பிய ஸ்ரீ புண்ணியகோடி ஸோமசுந்தரக் குருக்கள் அவர்களுக்கு என்னுடைய வணக்கத்தைச் செலுத்திக் கொள்கிறேன்.

இந்நூலைச் சங்கரநயினார்கோவில் சைவ சித்தாந்த சபை யார் தம் சபையின் மூன்றும் பிரசுரமாக வெளியிட அனுமதி கொடுத்திருக்கின்றனர். அச்சபை வாழ்க.

**சங்கரநயினார்கோவில்.**<br>*25—7—1954.*

**S. ராஜகோபாலன்.**

உ

# பதிப்புரை.

மக்களின் உணர்வு நிலையை ஒழுங்குபடுத்துங் கருவி தாய் மொழி யொன்றே யென்பது மொழிவல்லார் கோள்; கடவுள் வழிபாடு உணர்வு நிலையைப் பற்றியது; ஆகலின் தாய்மொழி யர்ச்சனைக் கிளர்ச்சி தவறில்லை என்கிறார் சிலர். அவரெல்லாம் மும்மல வியாதியஸ்தர். அவ்வகையில் நான் போல்வாரே அவர். ஆனால் அவர் அந்நோய்க்கு மருந்து தாமே செய்துண்பார். பரம சிவனொருவரே மருத்துவர், அவரருளிய சம்ஸ்கிருத வேத சிவாகமங்களே மருத்து நூல், அவற்றுட் கூறப்பட்ட சாதனங் களே மருந்து, அச்சாதனங்களை ஆண்டுக்கூறியவாறு அனுட்டித் தலே அம்மருந்தை யுண்டல், நோய் நீங்கி யின்பங் கிடைப்பது அப்போதுதான் என்று சொல்வது இந்நூல். தமிழச் சைவருக்குத் தமிழ் தாய்மொழியானால் சம்ஸ்கிருதம் தந்தைமொழியே. தமிழ் தமிழகத்துக்குரியதாயின் அவ்வகம் உள்பட அகிலபுவனங் களுக்குமே சமஸ்கிருதம் சமமாக வுரியது. இந்நூல் அதனையுஞ் சொல்கிறது. மக்கள் உணர்வு நிலையை ஒழுங்குபடுத்துங் கருவி எம்மொழியுமன்று, அம்மொழியிலுள்ள நூல்களேயாம். மொழிப் பிரஞ்ஞை வேறு, நூற் பிரஞ்ஞை வேறு. அந்நூல்கள் கருவி யாதலும் அவற்றின் ஆசிரியன்மாரது தரத்தளவே யென்க. கடவுள் வழிபாடு உணர்வுநிலையைப் பற்றியதாயின் பரமசிவ வழிபாட்டிற்கு மக்களின் உணர்வுநிலையை ஒழுங்குபடுத்துவன அவ்வேத சிவாகமங்களாகிய நூல்களே. ஆகலின் தாய்மொழி யர்ச்சனைக் கிளர்ச்சி தவறு பெரிதுடைத்தே. இந்நூலில் அதனையும் விளங்கக் காணலாம்.

இந்நூலை யியற்றி வெளியிடுதற்கண் ஸ்ரீ S. இராஜகோபால முதலியார் முதலிய அன்பர்கள் பலர் இவ்வாசிரியரவர்களைப் பெரிதும் ஊக்கப்படுத்தினார்கள் அவர்களெல்லாம் சைவ சீலமும், சைவாபிமானமும் மிக்கவர்கள். அவர்களுக்கும் இந்நூலை விரைவில் அச்சிட்டுதவிய தென்காசி, ஸ்ரீ சண்முகம் அச்சகத் தார்க்கும் என் நன்றி உரியதாகுக.

**T. சங்கரபாண்டியன்,**
காரியதரிசி,
**சைவசித்தாந்த சபை,**

சங்கரநயினார்கோயில்,
**3—8—1954.**

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க.

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத மந்திரங்களே வேண்டும்.

---

## 1. சைவஸ்தானம்.

வடக்குக் கயிலை. தெற்குக் குமரி. மேற்குச் சோமநாதபுரம். கிழக்குப் புஷ்பகநகரம். இந் நான்கெல்லைக் குட்பட்டது பாரததேசம். இதன் சநாதன தர்மம் சைவசமயம். இவ் வுண்மையை அவ்வெல்லை கூறியதால் அறிக. 'முந்தேவ ராதி புலவோர்கள் விண்ணின் முழுதின் பகற்றி யருளின் பிந்தேறி நின்ற முனைவன் பதங்கள் பெருகன்பி னோடு பணியு மத்தேயமான வுயர்பா ரதம்' என்றார் கச்சியப்ப முனிவர்பிரானார். 'Oh India, forget not that your ideal God is the great ascetic of ascetics Umanath Sankar.' என்றார் விவேகாநந்தர். 'ஆரியரும், திராவிடரும்......இந்தியாவுக்கு......குறைந்தபட்சம் பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் ...... வந்தவர்கள் இமயமலையிலிருந்து குமரி முனை வரையில் பரவி ...... ஒருவரோடொருவர் பிரிக்கமுடியாதபடி கலந்து ...... (அவர்களின்) சமயக்கோட்பாடுகளும், சமூக வழக்க பழக்கங்களும், கலைகளும், பண்பாடுகளும், பிரித்துக்காட்ட முடியாதபடி கலந்து போயிருக்கின்றன. இமயமலையிலுள்ள நேப்பாள நாட்டிலிருந்து தெற்கே ஈழநாட்டிலுள்ள திரிகோணமலை வரையில் சைவசமயமும், சிவலிங்க வழிபாடும், ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்து நிலை பெற்றிருக்கின்றன. சைவசமயிகள் அணியும் புறச்சின்னங்களில் ஒன்றான ருத்ராக்ஷ மணிகள் பல்லாயிரம் ஆண்டுகளாக நேப்

பாளத்திலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்துகொண்டிருக்கின்றன' என்ருர் 'கல்கி' யாசிரியர் டிசம்பர் 6, 1953 கல்கியில். இவை சில சான்றுகள். ஆகவே பாரததேச முழுவதும் சைவஸ்தான் என்பதாயிற்று.

## 2. முதல் நூல்.

சேனவரையமும், நன்னூல் விருத்தியும் தமிழ் இலக்கணநூ லுரைகள். அவற்றுள் சேனவரையம் 'வடசொல் எல்லாத் தேயத்திற்கும் பொது' என்றது. விருத்தி 'ஆரியச் சொல் எல்லாத் தேயத்திற்கும் விண்ணுலகை முதலியவற்றிற்கும் பொது' என்றது. அதனுல் சம்ஸ்கிருதம் பாரத தேசத்தின் பொது மொழி, எல்லா மாகாணங்களுக்கும் சமமாக வுரியது, தமிழகத்துக்கும் அதுவே யென்பது சித்திக்கிறது.

இருக்கு முதலிய நான்கும் வேதங்கள். காமிக முதலிய இருபத்தெட்டும் சிவாகமங்கள். அவை முதன் முதல் அம் மொழியி லுளவாயின. அவை முதல் நூல்கள். அவற்றையாக்கிய முதல்வனுர் பரமசிவனுர். அதுபற்றி அம்மொழி சைவசமயத் துக்கு விசேடமாகவும் உரியதாயிற்று. 'ஆரியத்தொடு செந் தமிழ்ப்பய னறிகிலா வந்தகர்', 'ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்' என்றது திருமுறை

அம்முதல் நூல்கள் சைவசமயத்துக்குச் சர்வ பிரமாண சாத்திரங்கள். 'மறைநாலுந் தம்பாட் டென்பர்', 'ரிக்கவேத மெய்ந்நூல்', 'தெருளு நான்மறை', 'பண்டாய நான்மறை', 'முடிவில்லா வேதத்து', 'சுருதிமறை நான்கான செம்மை', 'ஆரணம் பொழியும் பவளவாய்', 'வைதிகத்தின் வழியொழு காதவக் கைதவம்', 'மறைவழக்க மிலாத மாபாவிகள்', 'பதிக நான்மறை', 'இருக்கு நான்மறை', 'தொல்லிருக்கும் மறை யேத்துகந்து', 'சந்தோக சாமமோதும் வாயான்', 'வேத வேதாந் தன்', 'மறையீறறியா மறையோன்', 'சுருதி சிரவுரை', 'வேத விழுப் பொருள்', 'வேதாந்த நிலைக்குறி', 'தெய்வநான் மறை கள் பூண்ட தேராளை', 'மந்திரமுந் தந்திரமுந் தாமே', 'அண்

டர் தமக் காகமநூல் மொழியும்', 'அரவொலி யாகமங்க ளறிவா ரறி தோத்திரங்கள் விரவிய வேதவொலி விண்ணெலாம்வந் தெதிர்ந் திசைப்ப' என்றது திருமுறை. அவ்வடிகளில் அம்முதனூல்களின் பெயர்கள், அடைகள், சரிதைகள் முதலிய வுள. அவற்றை நோக்குக. அம்முதனூல்களைப் பற்றிய துதிகள் புலனும். வைணவமுந் தமிழ்நாட்டுச் சமயமாம். சிலர் கருத் தது அச்சமய நூல் நாலாயிரப் பிரபந்தம் அதுவும் 'இருக்கெசுர் சாமவேத நாண்மலர் ........' என்று பெயர்வரிசை கூறித் துதித்தது.

## 3. சைவ விதி.

மக்கள் அரசின் வழியாகத் தமக்கெனச் சட்ட திட்டங்களை வகுத்துக்கொள்வர். அவை இலௌகிகவிதி. அவ்வகுப்பில் காலதேசங்களுங் கவனிக்கப்படும். ஆதலின் அவ்விதியை வசதிப் படி மாற்றுவர், நீக்குவர், வேறும் வகுப்பர் அவர். அது குற்றமாகாது. ஏன்? உலகசுகமே அதன் குறிக்கோள். இன்னென்று சமயவிதி. அஃதிங்குச் சைவவிதி. அதை வகுத்தவர் பரமசிவனார். அதுதான் அம்முதனூல்கள். சைவசமூகம் சைவாலயம் சைவாதீனம் எல்லாம் அந்நூல்களைப் போற்றுக, விசுவசிக்க, அவற்றின் வரம்புக்குள் அடங்குக, அவற்றில் விதித்தவாறே ஒழுகுக. அவ்வளவே அவற்றின் கடன். 'மெய்ச்சுருதி விதிவழியோர் தொழும்' என்றது திருமுறை. காலந்தோறும் இவ்வுலகில் சைவமக்கள் வருகின்றனர், வாழ்கின்றனர், மாள்கின்றனர். அவ்வக்காலத்து அவர்தொகை கைம்மண்ணளவே. ஆனால் உலகம் அழியும். அதுவரை எதிர்காலத்திலும் அவர் வந்து போய்க் கொண்டிருப்பர். அத்தனை பேரையுஞ் சேரக் கணக்கிடுக அத் தொகை உலகளவிற்கும் அதிகமாகும் சைவவிதி அவர்க்கும் உரியது. அதை அக்கைம்மண்ணளவினர் தம் காலமிட முதலியவற்றிற்கேற்ப மாற்றலாமா? அதற்கவர் யார்? அவ்வுலகளவினர்க்குப் பிரதிநிதிகளா? மேலும் அவ்விதிக்குக் குறிக்கோள் வீடுபேறு. காலம் இடம் முதலியவற்றால் அவ்விதி பாதகமடையாது.

சைவசமூக நிலயங்கள் பல. அவற்றை அவ்வப்போது திருத்தவும் நேரலாம். திருத்துவ தென்பதென்ன? அவற்றை அவ்விதிவழி யொழுகுமாறு செய்வதே அது. திருத்துவதெப்படி? முதலில் அம்முதல் நூல்களை யாராய்க. பிறகு அவற்றைத் தழுவி வேண்டுந் திருத்தங்களைச் செய்க. முறை அதுவே. அரசு திருத்துவதாயினும் அதுவே கணக்கு. பிறவெல்லாந் தான்தோன்றித் தனமான திருத்தங்கள். அவை தீமையே பயக்கும். சைவவிதி, சைவசமயம், சைவசமூக நிலயங்கள் ஆகியவை தம்முள் தொடர்புடையன. அத்தொடர்பு மிகவும் முக்கியம். அஃதறுந்தால் அவை சிதறும். பிறகு அவை தனித்தனி பகைவர்க்கு இரைதான். சைவசமூகம் அதை உணர்க; அம்முதல்நூல்களில் விதித்தவாறே வாழ்க. அதுவே சைவவாழ்வு. அதன் பொருட்டு ஆற்றப் படுவதே சைவசேவை.

# 4. நலிவர்.

தமிழகத்தில் தமிழரனைவருஞ் சைவசமயத்தின ரல்லர். அச்சமயத்துக்குப் பரம துரோகிகளாயுள்ள தமிழரு மிருந்துவருகின்றனர். அவருங் கணக்கற்றவர். அவரிருப்புந் தொன்றுதொட்டது. ஆனால் சைவசமயத்தின ரனைவருந் தமிழரே. அவருள் தமிழை வெறுப்பார் யாருமிலர். அதனை விளங்கவைத்த புலவர் பெருமக்கள் பலர். அவரை யெண்ணுக. பெரும் பகுதியினர் சைவரே. அது தெரியவரும். அவர் தமிழை வளர்ப்பார். ஆனால் அத்துரோகத் தமிழரின் துரோகச் செயலும் அவருக்குத்தெரியும். அதற்கு இரையாமாறு தம் சமயத்தை அவர் விட்டுக்கொடார்.

நாத்திகத் தமிழர், சிரத்தையின்றி ஆத்திகம் பேசுந் தமிழர், சம்ஸ்கிருதத்தைப் பழிக்குந் தமிழர், பார்ப்பனரைப் பகைக்குந் தமிழர், எந்த ஆத்திக சமயநூலிலும் சிறிது பயிற்சியு மில்லாத தமிழர், தாழ்த்தப்பட்டவரென்ற வகுப்பாருள் சைவமாதி சமயங்களை யாசரித்தால் உலகில் முன்னேற முடியாதென நம்பிக்கை யிழக்குந் தமிழர், எம்மதமுஞ் சம்மதமென்னுந் தமிழர், தமக்கென எதுவுமிலாத தமிழர் எனச் சில தமிழருளர்.

அவரெல்லாங்கூடினர். அஃதொரு தமிழர்கூட்டம். சிலகாலமாகத் தமிழச் சைவருட் சிலரும் அக்கூட்டத்திலகப்பட்டனர். அவர் நிலையென்னை? அவர் தமிழ்ச் சைவநூற்களைப் படிப்பர். அவற்றிலுள்ள தமிழைச் சிறிது சுவைப்பர், ஆனால் சைவத்தை யறவே உமிழ்ந்து விடுவர். அவர் திருநீறு பூசிக்கொள்வர், உருத்திராக்கந் தரித்துக்கொள்வர், சமயப் பிரசாரமுஞ் செய்துவருவர். அப்பிரசாரத்திற் சமயமிருக்கும், தமிழ்ச்சமய மிருக்கும், இந்து சமய மிருக்கும். ஆனாற் சைவசமய மாத்திர மிராது. தமிழ் ஒருமொழி, சைவம் ஒரு சமயம், மொழி வேறு, சமயம் வேறு, அவ்வேறு பாட்டை அவர் விடுவர். சைவமென்று சொல்லுதற்கான சந்தர்ப்பங்கள் பலவரும். அப்போதெல்லாம் தமிழென்றே அவர் சொல்வர். அது சகவாச தோஷமுமாம். சைவசமூகம், சைவாலயம், சைவாதீனம் முதலியவெல்லாம் சைவத்தினுடைமை, சைவத்துக்கே யுரியன. ஆனால் அவை தமிழினுடைமை, தமிழுக்குரியன என்பாரவர். அத்துரோகத் தமிழரின் கை வலுப்பெற அது ஏதுவாகும். மொழிப்பொதுமைபற்றி அவ்வுடைமையை யாள, அதிற் பங்குபெற அவர் முற்படுவர். சைவசமயத்துக்கு அது பெருந்தீங்காகும்.

அச்சைவருக்கு ஒரு குலத்தில் வெறுப்புண்டு; சம்ஸ்கிருதம் அக்குலத்துக்கே யுரியதாய்: அப்படி அவர் மயங்கினார். அதனால் அம்மொழியும் அவருக்குக் கசந்தது. அக்கசப்பே அவரிடந் தமிழ்ப்பற்றாயிற்று. அது நீண்டது. வேதாகம நிந்தையிலும் அவர் இறங்கினார். அந்நூல்கள் சைவசமயத்துக்குப் பிரமாணவரம்பா யிருந்து வருவன. அவ்வரம்பை யழிக்க அவர் முந்துகிறார். கற்புவரம் பழிந்தாள் ஒருத்தி. அவளோடு வாழ்கிறான் அவள் கணவன். அவனால் இல்லறத்தைச் சரியாய் நடத்த முடியுமா? அதன் பயனை யடைய முடியுமா? அப்படியே பிரமாண சாத்திர வரம்பழிந்த சைவம் சைவமாகாது. அதை வைத்துச் சைவசமூகம் வாழமுடியாது; வாழ்வதாற் பயனுமில்லை. சைவத் துரோகிகளின் செயலே உருப்பெறும். அதற்கு அவ்வரம் பழிப்பே முதற்படி. ஆகையால் அச்சைவரிடம் சைவசமூகம்

ஜாக்கிரதையா யிருக்கவேண்டும் இனி அச்சைசவர் இந்தக் கட்டுரையில் கவினை ரெளப்படுவர்.

## 5. தமிழ் மந்திர மோகம்.

ஒவ்வொரு மாகாணத்துக்கும் மாகாண மொழி யுண்டு. ஒரு மாகாணத்தில் சமாஸமுடைய இரண்டு மூன்று மொழிகளும், பிகப்பிறிய அளவில் வியாபித்த மொழிகளு மிருக்கலாம். பாரத தேசத்தில் மாகாணந்தோறும் சைவாலயங்கள் பல அவற்றில் பிரதிட்டை, உற்சவம். அர்ச்சனை யாதிய நடைபெறும். அப்போது மந்திரங்கள் ஓதப்படும் அவை சம்ஸ்கிருத வேதாகமங்களி லுள்ளன. வேறெம் மாகாணத்தாரேனும் தம் மாகாண மொழியில் சர்மந்திரங்க ளிருக்கவேண்டுமென விரும்புகின்றனரா? கிளர்ச்சி செய்கின்றனரா? தமிழகத்தில் மாத்திரம் அந் நவீனர் தமிழ் மந்திரங்கள் வேண்டுமென்கின்றனர். தமிழில் மந்திரங்களிருந்தால் அவற்றை எடுத்தாளலாம், இல்லாவிட்டால் சிருட்டித்தாளலாம் என்கிறு ரவர். அவரும் இருவகையினர். சம்ஸ்கிருத மந்திரங்களை அறவே நீக்குக என்பர் ஒருவகையார் வழக்கத்திலுள்ள சம்ஸ்கிருத மந்திரங்களு மிருக்கட்டும், அவற்றோடு தமிழ் மந்திரங்களையுஞ் சேர்த்துக்கொள்க என்பர் இன்னொரு வகையார். ஒட்டகம் கூடாரத்தை ஆக்கிரமித்தது. அராபியன் வெளியில் தள்ளுண்டான். அக்கதை பிரசித்தம். இப்பிந்தியார் செயல் அக்கதைபோலவே முடியும். ஆகையால் இவர் அம்முந்தியாருக்கு மறைமுகத் துணைவரே தமிழ் மந்திரப் பற்றென்பது ஒரு மோகம் அது அந் நவீனரைப் பீடித்தது. தமிழவைணவராதி பிறசமயத்தாரு முளர். அவரையும் அது தொட்டதோ? என்னவோ?

தமிழ் மக்களுக்குச் சம்ஸ்கிருத மந்திரங்களின் பொருள் விளங்காது. ஆகையால் தமிழகச் சைவாலயங்களில் தமிழ் மந்திரங்களே வேண்டும்." அவர்க்கு அவற்றின் பொருள் விளங்கும். அதனால் மனங்கலந்த பத்திவழிபாடு கூடும். நாத்திகந் தொலையும் இவை அந்நவீனர் கூற்று. அதுபற்றிச் சிறிது ஆராயலாம்.

## 6. பெயர்ப்பு மந்திரங்கள்.

சம்ஸ்கிருத மந்திரங்களைத் தமிழிற் பெயர்த்து அப் பெயர்ப்புக்களைத் தமிழ் மந்திரங்களெனக் கொள்க இப்படிக் கூறுவோரும் அவருளிருக்கின்றனர். மந்திரமென்ற பதமே சம்ஸ்கிருதம். மனனம், திராணம் என்பவை சேர்ந்தன. அப்பதந் தோன்றியது. நினைப்பவரைக் கரை சேர்ப்பது என்பது அதன் பொருள். அப்பதத்தின் தமிழ்ப் பெயர்ப்புச் சொல்லே இன்னுங் காணப்படவில்லை. அது கிடக்க. இனி அம்மந்திரங்களைப் பெயர்த்துக் கொள்ளட்டும். அம்மூல மந்திரங்களை என் செய்வது? ஒதுக்கிவிடுவதா? அது நன்றிகெட்ட செயல். மேலும் பெயர்ப்புக்கள் சரியானவையென்று எப்போதும் நம்பப்படல் வேண்டும். அதற்காக அம்மூலங்களைப் போற்றிவைத்தல் அவசியம். இன்றேல் அன்னிய சமயிகள் திரிபு செருகல் நீக்கல் என்பவற்றைச் செய்வர். அம்மூலங்கள் கெடும். அப்பெயர்ப்புக்களும் நம்பிக்கையை யிழக்கும். இன்னும் அவ்விரு மொழிப் பயிற்சியும் வேண்டும் இன்றேல் பெயர்ப்பும், மூலங்களைப் போற்றிக் கோடலும் இயலா.

ஏகாக்கரம், பஞ்சாக்கரம், ஷடக்கரம், அஷ்டாக்கரம், நவாக்கரம், 'மிக்கவா கமத்தாற் பூசை விளைத்தெழுத் தொன்றி ரண்டு — தக்கநான் கைந்தா றெட்டுத் தசமிரா றிருபத் தெட்டிற் — றொக்கமந் திரங்களாதி பல", காயத்திரி, ஹம்ஸம், பஞ்சப்பிரமம், ஷடங்கம், ஹிருதயர், பிராஸாதம், ஸப்தகோடி, கலா, ஸம்ஹிதா, ஆஸனம், பீஜம், அஷ்டோத்தரசதம், ஸஹஸ்ரம் என மந்திரங்கள் பல. அத்தனையும் சைவானுட்டானத்துக் கவசியம். பிரதிஷ்டை, அஷ்டபந்தன மாதிய ஒருபுறம். தீக்ஷை, உபநயனம், கலியாணம், ஸீமந்தம், பிரேத காரியம், அந்தியேஷ்டி, சிராத்தமாதிய மற்றொருபுறம். அவையெல்லாம் வேதாகமோக்த மான சைவக் கிரியைகள். அவை அற்ப சொற்பமல்ல. மந்திரங் கிரியை பாவனை யில்லாத சைவம் ஏது? அம்மூன்றனுள் ஒன்றை

யின்றி யொன்றில்லை. ஒன்று மாறினால் மற்றவையும் மாறும். அம்மந்திரங்களை யெல்லாந் தமிழிற் பெயர்க்க வுத்தேசமா? முடியுமா?

இன்னும் ஏகாக்கரம் பஞ்சாக்கர முதலியன எண்ணடியாகப் பிறந்த பெயர்கள். அவற்றைத் தமிழிற் பெயர்க்க: அப் பெயர்ப்புக்களைவிட்டு அப்பெயர்கள் விலகும். அந்நஷ்டம் சிறிதா? பத்தாந் திருமுறையிற பல சக்கரங்கள் சொல்லப்படுகின்றன. அவற்றில் அப்பெயர்ப்பு மந்திரங்களின் எழுத்துக்கள் அடங்குமா? அச்சக்கரங்களையும் மாறறி யமைக்க வேண்டுமோ?

அத்திருமுறையில் 'இட்ட விதழ்க ளிடையந் தரத்திலே — யட்டஹவ் விட்டதின் மேலே உவ்விட்டுக் — கிட்ட விதழ்களின் மேலே கிரோம்சிரோ — மிட்டுவா மத்திற் கிரோங் கென்று மேவிடே' என்று வருகிறது. அன்ன பாடல்கள் பல. அவற்றிலுள்ள மந்திரங்களெல்லாம் சம்ஸ்கிருதமே அவ்வாசிரியர் அவற்றை யப்படியே தந்தார், அவற்றுள் ஒன்றையாவது தமிழிற் பெயர்க்கவில்லை. ஏன்? அவறறை யப்படியே ஓத வேண்டும். அவர் கட்டளை அது அதனாற்றான் அத்திருமுறை திருமந்திரமென் றாயிற்று.

அத்துவாக்கள் ஆறு. அவற்றுள் வர்ணம் ஒன்று பதம் ஒன்று. வர்ணம் – எழுத்து. பதம் – சொல். சம்ஸ்கிருதத்தில் உயிர் பதினாறு, மெய் முப்பத்தைந்து. அவ்வைம்பத்தோ ரெழுத்துக் களுமே வர்ணாத்துவா. அவ்வெழுத்துக்களால் எண்பத்தொரு பதங்க ளியன்றன. அவை பதாத்துவா. அவ்வெழுத்துக்களைத் தமிழாக்க முடியாது. அப்பதங்களுக்குத் தமிழிற் பொருள் தெரியலாம் ஆனால் அத்தமிழ்ச் சொற்கள் பதாத்துவா ஆகா. ஏன்? அச்சம்ஸ்கிருத வர்ணங்களாலாகிய அச்சம்ஸ்கிருத பதங்களே பதாத்துவா: அப்படித் தெளியக் கூறியது சிவாகமம். ஷடத்துவ ஆவாகனம், அவறறின் வியாப்பிய வியாபக வுபதேச மாதியன நிர்வாண தீக்ஷையின் அங்கங்கள். பெயர்ப்புக் கொள்கை அத் தீக்ஷைக்கு உலையாகும்.

அர்நவீனர் பிள்ளையார்சுழி யிடுவதில்லை, அவ்விடத்தில் ஓம் என்றெழுதுவர். ஓம் தமிழாம்: அவர் சொல்கிறார். 'ஓமென்று மறைபயில்வார்' என்றது திருமுறை. ஓமென்று தொடங்கிப் பயிலும் மறை தமிழிலில்லை. சம்ஸ்கிருத வேதங்களே அப்படிப் பயிலப்பட்டு வருகின்றன. அன்றியும் ஹூங்காரம், ரீங்காரம், மமகாரம், அஹங்காரம், ஹ்ரீங்காரம், என்பன சம்ஸ்கிருத வழக்கு. ஓங்காரமும் அன்னதே. திருமுறையும் 'ஓங்காரத்துட் பொருள்' எனக் கூறி அவ்வழக்கை ஏற்றது. ஆகையால் அம் மந்திரமும் சம்ஸ்கிருதமே. தமிழ்ச்சொற்களைக் காரச்சாரியை கொடுத்து வழங்கலாமா? அதற்கு விதி யென்னை?

சிவ மந்திரம், உமாமந்திரம். விநாயக மந்திரம், ஸ்கந்த மந்திரம், விஷ்ணு மந்திரம், காருடமந்திரம் என்பன தெய்வம் பற்றிய வழங்கற்பாடுகள். சமயம்பற்றியும் மந்திரங்கள் வழங்கப் படும். முன் காட்டப்பட்ட ஏகாக்கரமுதலிய வழக்குகளுமுள. அத்தனையுந் துவேஷக் கலப்பற்றன. ஆதலின் தம்முள் மோதா. ஆனல் தமிழ்மந்திர மென்ற மாத்திரத்தில் தெலுங்கு முதலிய பிறமொழிகளிலும் மந்திரந் தோன்றுதற்கு இடங்கொடுக்கப்பட்ட தாகும். அதனல் தமிழ்மந்திரம், தெலுங்குமந்திரம், ஹிந்திமந் திரம், குஜராத்திமந்திரம் என மொழிபற்றிய வழக்குகளும் முளைக்கும் அது ஆரியமந்திரம், திராவிடமந்திரம், கிரேக்மந் திரம் முதலிய இனம்பற்றிய வழக்குகளையும், சென்னை மந்திரம், சீனமந்திரம், இலங்கைமந்திரம் என நிலம்பற்றிய வழக்குகளையும், பிறவற்றையுந் தோன்றச் செய்யும். அவை பரிகாசத்துக் கிடம், அன்றியும் ஒரு சமயத்தினருக்குள்ளேயே சண்டையை மூட்டும், ஆகையால் துவேஷ ஜன்யமுமாம்.

மந்திர சப்தம் உமாமயம் மந்திர அர்த்தம் சிவமயம். வேதாகமோக்த மந்திரங்களுக்கே அவ்விலக்கண முண்டு. ஆகலின் அச்சப்தமும் அர்த்தமும் ஆற்றலுடையன. அந்நவீனர் விரும்பும் மந்திரங்கள் வேறு. அவற்றுக்கு ஆற்றல் சொல்லிலா? பொரு ளிலா? இரண்டிலுமேயா? சொல்லிலெனின், தமிழ்ச்சொற்க ளிற்றான் அஃதுண்டெனச் சாதிக்கவேண்டும். அஃதவரால்

முடியுமா? தெலுங்கர் முதலியோர் அதனை யேலார். அவர் தம் மொழிகளிலேயே அஃதுண்டென்பர். பொருளிலெனின், சம்ஸ்கிருத மந்திரப்பொருள் தமிழுக் கிரவலே. அதறகுந் தமிழுக்குஞ் சம்பந்தமில்லை. இரண்டிலுமேயெனின், அம்மந்திரங்கள் தமிழுக்கே உரியவாதல் வேண்டும் தமிழ்மந்திரங்களுளவா?

செய்யுளை வசனமாக மாற்றலாம். அதுவும் பெயர்ப்புத் தான். தேவாராதிகள் செய்யுள். அது பலருக்கு விளங்காது. அதனை வசனத்திற் பெயர்க்க. அவ்வசனத்தை அவர் படிப்பர். ஆனால் அச்செய்யுளைப்போல் அவ்வசனத்தையும் ஓதலாமா? அவ்விரண்டாறகும் ஓதும் பயன ஒன்றுதானோ? ஆமெனின், அச்சம்ஸ்கிருத மந்திரங்களையும் அவற்றின் பெயர்பபுக்களையும் ஓதுதறகுப் பயன் ஒன்றுதான்.

செய்யுள் நடையில் தரவேறுபா டுண்டு. வசன நடையிலும் அப்படியே. மந்திரப் பெயர்ப்புக்கு வேண்டுவது செய்யுளா? வசனமா? எந்நடை தரம்?

சம்பந்தரை வணங்கி முத்திபெறுவர் பலர். அப்படியே மாணிக்கவாசகரையும் வணங்கி முத்திபெறலாம். அவர் திருவாசகத்தை யநளினூர் அதை ஆங்கிலத்திற் பெயர்த்தார் போப் என்பவர். இலண்டனில் ஒரு சிவாலயமிருப்பதாகக் கொள்க. அதில் அப்பெயர்ப்பைத்தானே ஓதவேண்டும்? தமிழருக்குத் தமிழ் போன்றது ஆங்கிலருக்கு ஆங்கிலம். ஆகலின் அம்மூலத்துக்கும் பெயர்ப்புக்கும் ஓதற்பயன் ஒன்று: அப்படிக் கூறுவதே அந்நவீனருக்கு நியாயம். இங்கு மாணிக்கவாசகர் திருவுருவம் வணங்கப்படுகிறது அங்குப் போப்புருவம் வணஙகப்படலாமா? ஆமெனின், அவ்வுருவை இங்கும் வணங்கினு லென்னே? மாணிக்கவாசகரின் பெயர்ப்பே போப். அப்படியுஞ் சொல்லிக்கொள்ளலாம் அந்நவீனர்.

வாக்குக்கள் மூன்றுவகை. அவறறுள் ஒன்று ஞானவாக்கு. அது பரமசிவனு ருடையது. வேதாகமங்களே அது. இன்னொன்று அனுபவவாக்கு. அது சம்பந்த ராதியருடையது.

தேவாராதி திருமுறைகளே அது. பின்னொன்று பிராகிருதவாக்கு. அது சிவானுபவமில்லாதாருடையது. நான்போன்றோரெழுதும் நூல்கள் பல அவையெல்லாம அது. ஞானவாக்கும் அனுபவ வாக்கும் அருள்நாதவொலி. பிராகிருதவாக்கு மாயாநாதவொலி. அந்த ஞானவாக்கி லுள்ளன ஸம்ஸ்கிருத மந்திரங்கள். ஆகலின் அவையும் அருள்நாத வொலியே அவையே சித்தி முத்திகளைப் பயக்கும். அவற்றைப் பெயர்ப்பதென்ப தென்ன? மாயாநாத வொலி யாக்குவதேயாம் அவ்வொலிச் சொற்கள் அப்பயனைத் தரா. தேவாராதிகளைப் பெயர்த்த வசனமும் மாயாநாதவொலி தான் ஆகவே எங்குள்ள சைவாலயங்களிலும் அவ்வொலிச் சொற்களை மந்திரங்களாக ஓதக்கூடாது

## 7. திருமுறை மந்திரங்கள்.

தேவார முதலிய திருமுறைகளுள; அவற்றிலிருந்து சிலபல பதிகங்களையாவது பாடல்களையாவது, பாதங்களை யாவது, பதத்தொடர்களையாவது, பதங்களையாவது எடுத்து வரிசைப்படுத்தி அக்கோவையை மந்திரங்களெனக் கொள்ளலாம்; இப்படிக் கூறுவர் அநநவீனர். தமிழகத்துச சைவாலயங்கள் பல. அவற்றில் தேவாராதிகள் ஓதப்பட்டே வருகின்றன. அவற்றை ஓதிவருபவர் ஓதுவார் அந் நியமந் தொன்றுதொட்டது. அவ் வாலயங்களில் திருவுருவங்க ளுள. அவற்றிற்கு உபசாரங்கள் செய்யப்படும் அவற்றுள் அவ்வோதுகையு மொன்று. அதற்கும் அந்நவீனர் விரும்பும் அக்கோவையை ஓதுகைக்கும் வேறு பாடென்னை?

எல்லாரும் ஞானவாக்கின் விதிப்படியே யொழுக வேண்டும். அப்படி யொழுகாதவரைப் பிறப் பிறப்புக்கள் விடா. தேவார முதலியவற்றின் ஆசிரியன்மார் தம் முன்னைப் பிறப்புக் களில் அவ்விதியைக் கசடறக் கற்றனர், கற்றபின் அதற்குத் தக நின்றனர். அவர்க்கு முத்தி சித்தித்தது அவ்வேதாகமங்களே கற்பவை யென்ற உண்மையை அவர் [illegible] கண்டனர்.

ஆகலின் அவ ரருளிய தேவாராதிகள் அனுபவ வாக்கெனப் பட்டன. திருமுறைப் பாடல்கள் பலவாயிரம். அவற்றுள் அவ் வாசிரியன்மார் தம்மைப்பற்றியுங் கூறியிருக்கின்றனர் 'நான் மறை வல்ல ஞானசம்பந்தன்', 'நான்மறை யங்க மோதிய நாவன் — வன்றொண்டன்', 'செழுமறை தெரியுந் திகழ்கரு வூரன்', 'மறைவல வாலி', 'மாசிலா மறைபல வோதுநாவன் வண்புரு டோத்தமன்' என்பவற்றை நோக்குக. அவரெல்லாஞ் சம்ஸ்கிருத சதுர்வேத விற்பன்னரென்பது விளங்கும். அவர் தம் பாடல்களைப்பற்றியும் பேசினர். 'ஆரணம் பொழிந்த பவளவாய் சுரந்த வமுதமூ றியதமிழ் மாலை', 'ஆரணத் தேன்பருகி யருந் தமிழ் மாலை கமழவரும்' என்பன காண்க. திருமுறைகள் வேதக் கருத்தையே பிரதிபலிக்கின்றன வென்பது விளங்கும். ஆனால் ஒருவகையில் அவரெல்லாம் ஒருமுகமான எச்சரிக்கையுட னிருந் திருக்கின்றனர். என்னை? தம் பாடல்கள் வேதமென்றோ, மந்திர மென்றோ, அவற்றிற்குச் சமமென்றோ அவர் புகழவில்லை,

ஆனால் அவர் 'மந்திர வேதங்கள்', 'மந்திரத்தமறை' 'மந்திர மறை', 'பந்திர நான்மறை', 'மந்திர மாமறை', என்று பாடினர். சம்ஸ்கிருத வேதங்களே சர்வ மந்திரங்களுக்கும் ஆகரம் அவ்வுண்மையை அவ்வடிகள் ஏற்றுள்ளன. வேதம் மந்திர மயம்; அதனால் மந்திரமென்ற பெயரும் பெற்றது. 'மந்தி ரமுந் தந்திரமுந் தாமே' என்றது காண்க. மந்திரம் — வேதம். தந்திரம் — சிவாகமம் 'இருக்குருவா மெழில் வேதம்' என்றது பத்தாந் திருமுறை. இருக்குரு — மந்திரவடிவம்.

இன்னும் 'நன்றுமிகு நாண்மலரா னல்லிருக்கு மந்திரங் கொண் — டொன்றிவழி பாடுசெய லுற்ற வன்ற னோங்குயிர் மேற் — கன்றிவரு காலனுயிர் கண்டவனுக்கன்ற ளித்தான் — கொன்றைமலர் பொன்சொரியுங் கோளிலியெம் பெருமானே', 'வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப் — போதத் தால் வழிபட்டான்', 'நலமலி தருமறை மொழியொடு ...... மல ரவை கொடுவழி படுதிறன் மறையவ னுயிரது கொளவரு ......

மற விதனுயிர் கெடவுதை செய்தவன்' என்றது திருமுறை. அவற்றிலுள்ள இருக்குமந்திரம் வேதத்தின் மந்திரம், மறை மொழி யென்பன வொன்றே இருக்குமந்திரத்துக்கு நல் என்பதும், மறைமொழிக்கு நல மலிதரு என்பதும் விசேடணங்கள். அவற்றையுங் கருதுக. போதத்தால் வழிபட்டான் என்று மிருக்கிறது. போதம் — ஞானம் வேதமந்திரத்தால் வழிபடுவதே ஞானவழிபாடு. அது விளக்கம். வேறு மந்திரங்களால் வழிபடுவது மூடவழிபாடு. அது தொனி. சம்ஸ்கிருத வேத மந்திரங்களே மந்திரங்கள். அவைகொண் டர்சசிப்பதே அர்ச்சனை எம பயம் நீக்கினதே அதறகுச சாட்சி அதறகேற்ற மந்திரங்களை வேதத்திலிருந்து கண்டெடுத்தானே அம்மறையவன், அதுவே அவனுடைய திறல் அம்மந்திரங்களை யப்படி வந்தித்தன திருமுறைகள்.

ஆகவே வேதத்தை விட்ட அறமில்லை. அப்படியே திருமுறைகளும் வேதத்தை விடா. ஆகலின் வேதத்தை விசுவசிப்பவரே அவறறை ஓதுதற் குரியார். அவையும் அவருக்கே அனுக்கிரகிக்கும். வேதநிந்தகர் அவற்றையும் நிந்திப்பவரே. அவர் அவற்றை வேறெப்படியும் போற்றுக, ஓதுக, அவை அவரைக் கண்டு நாணி விலகும். அவ்வோதுகை வெறும் ஆரவாரம். ஆதலின் ஞான வாக்கின் ஸ்தானத்தில் ஞான வாக்கு இருப்பதாக, அதை அனுசரித்த ஸ்தானத்தில் அனுபவ வாக்கு இருக்கவேண்டும். அனுபவ வாக்கை என்ன வகை செய்தும் ஞானவாக்கின் ஸ்தானத்தில் வைக்கக்கூடாது. வைத்தால் அவ்விரு வாக்குக்களுமே அவமதிக்கப்பட்டனவாகும் சைவாலயங்களில் சம்ஸ்கிருத வேதமந்திரங்கள் முதலில் ஓதப்படுகின்றன. பின்னர்த்தான் தேவாராதிகள் ஓதப்படும். அம்மரபைக் காண்க

வேதம் பதிகப் பாகுபாடுக ளுடையது. தேவாரமும் அப்படியே. வேதத்தை அனுசரித்தது தேவார மென்பதை அதனாலுந் தெரியலாம்.

அர்ச்சனை பாட்டே யாகும்' என்றது பன்னிரண்டாந் திருமுறை; ஆ த லி ன் அர்ச்சனைக்குத் திருமுறைகளை ஓதின

லென்ன? என்பர் அந்நவீனர். அப்பாட்டாவது ஏழாந் திரு முறை. அதைப் பாடியவர் சுந்தரர். அவர் எந்தச் சைவாலயத் திலாவது பதிகங்கள் பாடி அர்ச்சனை செய்திருக்கின்றனரா? இல்லை. ஆகையால் அவ்வடி அந்நவீனர் கொள்கைக்கு இசை யாது. அர்ச்சக குலத்தின ராகிய அச்சுந்தரரை மாத்திரம் 'நீ அர்ச்சனை செய்ய வேண்டாம் நம்மைப் பாடிக்கொண்டே யிரு. போதும், உன் பாடல்களையே நாம் அர்ச்சனையாக ஏற்றுக்கொள் வோம்' என்று பரமசிவனுர் அனுமதித்தார். அர்ச்சனைக்குப் பாட்டு என்றில்லை. பாட்டே அர்ச்சனை. அவ்வேறுபா டறிக.

இனிக், கைவல்ய நவநீத முதலியன மாயாவாத நூல்கள். பிரபுலிங்க லீலை முதலியன ஐக்கியவாத நூல்கள். வடலூர் இராமலிங்கர் சைவசமயத்தவ ரல்லர் அதை அவரே சொல்லி விட்டார். அவர் பாடியவும் பல நான்போன்றா ராக்கும் பாடல் களு முள அவையுங் கணக்கில. அவையெல்லாந் தமிழே. அவற் றிலுஞ் சிவதுதிகள் மிகுதி. சைவாலயங்களில் அர்ச்சனை யாதிய வற்றிற்கு அவற்றிலிருந்துந் தமிழ் மந்திரங்கள் திரட்டலாமா? ஆகாதா? ஆமெனின், அப்பாடல்களோடு திருமுறைப் பாடல் களுஞ் சம மென்றாகும் அதுவுந் திருமுறை நிந்தையே ஆகா தெனின், அவற்றின் தமிழை நிந்தித்த தாகும். அந்நவீனருக்கு அது நியாய மன்று

தமிழகத்தில் சைவாலயங்கள் முந்தித் தோன்றின. திரு முறைகள் பிந்தியவை. அம்முந்திய காலத்தில் அவ்வாலயங்களில் எந்தத் தமிழ்முறைகள் மந்திரங்களாக ஓதப்பட்டன? சம்ஸ்கிருத வேத மந்திரங்களே இன்றேபோல் அன்றும் ஓதப்பட்டன. அவ் வோதுகைக்கு முந்திய கால மென்பதில்லை. இருந்தால் அது சைவாலயங்களுந் தோன்றாத காலமே யாம்.

## 8. சிருட்டி மந்திரங்கள்.

நினைப்பவரைக் கரை சேர்ப்பது மந்திரம். அப்பொருள் கொண்ட மந்திரங்கள் சம்ஸ்கிருத வேதத்திற்று ளுள. தவமுடை

யார் நிற்குமுறையில் நிற்பர், அவற்றை ஓதுமுறையில் ஓதுவர்; அதனால் தம்மை நிறைமொழி மாந்த ராக்கிக் கொள்வர். அவரே நீத்தார். ஒவ்வொரு மந்திரத்தையும் ஒவ்வொரு தேவதை அதிட்டிக்கும். அவர் அம்மந்திரத்தைச் செபிக்கும்போது தம்மை அத்தேவதையாகப் பாவிப்பர் அதனால் அவரிடம் ஒரு சத்தி பிறக்கிறது. அதுதான் சாபானுக்கிரக சத்தி. அவர் தீயவரைச் சபிப்பர், நல்லவரை அனுக்கிரகிப்பர். அச்சாபானுக்கிரக வசனங் கள் மந்திரங்களென உபசரிக்கப்படும் செபிப்பவரை நிறை மொழி மாந்த ராக்குவது சம்ஸ்கிருத மந்திரம். தொல்காப்பியத் தில் தமிழ் மந்திரமென வொன்றுளது. அதுதான் அச்சாபானுக் கிரக வசனங்கள். அது செபிப்பதற குரிய தன்று, செபிப்பவரை நிறைமொழி மாந்த ராக்கவுஞ் செய்யாது. அதனையே அந்நூல் மறைமொழி யென்றது திருக்குறளி லுள்ள மறைமொழியும் அதுவே. திருமுறைகள் சொன்ன 'மறைமொழி', 'வேத மொழி' கள் சம்ஸ்கிருத வேத மந்திரம்.

தொல்காப்பியரும் வள்ளுவருங் கூறிய மறைமொழிக் கும், மந்திரத்துக்கும் மதமும் மறுப்புமான விருத்தியுரை யில்லை. 'மந்திரப் பொருட்கண் அப்பொருட் குரித்தல்லாச் சொல் வரு வனவும் என்றவாறு. இதற்குதாரணம் மந்திர நூல் வல்லார்வாய்க் கேட்டுணர்க' எனவும், 'அவர், ஆணையாற் கிளக்கப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாமன் மறைத்துச் சொல்லுஞ் சொற்றொட ரெல்லாம் மந்திர மெனப்படும் என்றவாறு. அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க .........இவை தமிழ் மந்திரம்......' எனவுமே இப் போதுள்ள தொல்காப்பியவுரை யிருக்கிறது. மந்திரப் பொருட் கண் அப்பொருட் குரித்தல்லாச் சொல் வருவதெற்றுக்கு? ஆணை யாவது யாது? அதற்கும் அவர்க்கு முள்ள சம்பந்தமென்ன? புறத்தா ராவார் யார்? புலனாகாம லென்பதெது? மறைத்துச் சொல்வானேன்? இவ்வினக்கள் எழுகின்றன. விடைவேண்டும். அந்நவீனரால் தர முடியுமா? மந்திரமும் அதன் பொருளும் எல் லார்க்கும் புலனாகவேண்டும்: அவர் கொள்கை அது. அதற்கு அத் தமிழ்மந்திரமாவது பொருந்துகின்றதா? இல்லை.

இன்னும் திருமுறைகளில் மந்திரப் பொருளின்கண் அப்பொருட்கு உரித்தான சொல்லே வந்துள்ளது. அந்நூல்களின் பொருள் புறத்தார் முதல் எல்லார்க்கும் புலனாகும் என்று கொண்டால் அவை தொல்காப்பிய வுரையின்படி மந்திரங்களாகா. அவற்றில் மந்திரப் பொருளின்கண் அப்பொருட்கு உரித்தல்லாத சொல்லே வந்துள்ளது. அவற்றின் பொருள் புறத்தார்முதல் யாவர்க்கும் புலனாகாது என்று கொண்டால் அவை அந்நவீன ரின் கொள்கைப்படி மந்திரங்களாகா ஆகவே அவ்வுரைப் பகுதியால் அவராசை நிருமாறில்லை.

அன்றியும் அவ்வுரைப்பகுதித் தமிழ்மந்திரத்துக்கு உதாரணத்தோடு கூடிய விளக்கம் வேண்டும். மந்திரநூல் வல்லாரே அதனைத் தரக்கூடியவர் அவ்வுரைகாரர் அப்படிச் சொல்லிக் கையை விரித்துவிட்டார். தமிழ் மந்திரநூல் உண்டா? அதில் வல்லாருளரா? அவர் விளக்கந் தருநாள் என்று? அன்றுவரை அப்பகுதியை ஒதுக்குக மந்திர விசாரணைக்கு அது உதவாது. மேலும் தமிழ்மந்திரமென்ற பிரஸ்தாபம் அஃதொன்றுதான். அது பிற பிரமாணங்களால் வலியுறவில்லை. அந்நவீனர் அதனை யெடுப்பானேன்? விஸ்தாரஞ் செய்வானேன்? 'திருநான்மறை விளக்க ஆராய்ச்சி' என்றோர் அறிவாராய்ச்சி நூலுளது. சிரு மா-சாம்பசிவப் பிள்ளையவர்கள் அதனாசிரியர். தமிழ் மந்திர மென்பது முதலிய பல அசைவக் கொள்கைகள் அதிற் சர்ச்சை செய்து மறுக்கப்பட்டுள்ளன. அந்நூலிற் காண்க

நிற்கத். தமிழ்மந்திரங்க ளில்லையாகுக: அவற்றை புதியனவாகச் சிருட்டித்துக் கொள்ளலாம்: அப்படிக் கூறுவர் அந்நவீனர் சீடர்களின் பக்குவத்தில் தாரதம்மிய முண்டு. அதற்கேற்ப ஆசிரியன் அவருக்கு மந்திரோபதேசஞ்செய்வான். அவனும் மந்திரங்களைச் சிருட்டித் துபதேசியான் அவனுக்கே அவ்வுரிமை கிடையாது. தகுதியுமில்லை அந்நவீனருக்கு மாத்திரம் அவை வந்துவிடுமா? அவருக்குங் குருபரம்பரை யிருக்கலாம். அதில் எத்தனையோ குருமார் வந்திருப்பர். அவருள் யாராவது மந்திரத்தைச் சிருட்டித்து உபதேசித்திருக்கின்றனரா? இப்போதும்

ஆதீன பீடாதிபதிக ளுளர். அவருந் தமக்கு முந்திய ஆசாரிய ரிடம் உபதேசங் கேட்டவர்தான். அது திருமுறை மந்திரமா? தொல்காப்பியத் தமிழ் மந்திரமா? சிருட்டி மந்திரமா? அவற்றுள் எதுவு மன்று அவர் கேட்ட வுபதேசம் வேதாகமோக்த சம்ஸ் கிருத மந்திரமே மேலும் மந்திரத்தை அவரவரே சிருட்டித்துக் கொள்ளட்டும்: குருபரம்பரை குலைந்தேபோம் ஒருவேளை அந் நவீனருக்குச் சற்குரு பரம்பரை யில்லையோ? இல்லையென அவர் சொல்லட்டும். பிறகு அவர் தம்மனம்போற் செய்க. அன்றியும் மந்திரங்களே மற்றவற்றைச் சிருட்டிக்கும்: பெரியோர் கருத்தது. அந்நவீனர் மந்திரங்களையே சிருட்டிக்கவேண்டு மென்கின்றனர். அச்சிருட்டி கர்த்தாக்கள் யார்? முதலில் அவர் சிருட்டிக்கப்பட்டு விட்டனரா? அவருக்கு அச்சிருட்டிசத்தி வந்தவா றெங்ஙனே? மந்திரசிருட்டிசத்தி முன்னது. அதன் விளைவாய்ப் பின்னது அம் மந்திரம். இப்பின்னது அம்முன்னதை எய்துவியாது. ஆகலின் அம்மந்திர செபம் அவருககு வேண்டாம். அதனைப் பிறரும் விரும் பார் தமக்கு வேண்டும் மந்திரத்தை அவருஞ் சிருட்டித்துக் கொள்வர். சைவசமய வரம்பு அழிக்கப்பட்டுவருங் கால மிது. ஆகலின் அவரவ ரறிவே அவரவருக்கு வழியுந் துணையு மாம். ஆனால் அச்சிருட்டி மந்திரங்கள் அவரவர் வீட்டிலோ, ஏட்டிலோ இருந்திடுக. சைவாலயங்களில் அவை நுழையக்கூடாது. சிவாக மங்கள் அனுமதிக்க வில்லை.

## 9. மனங் கலந்த பத்தி.

தமிழருக்கு மனங் கலந்த பத்திவழிபாடு வேண்டும், அதற்குச் சம்ஸ்கிருத மந்திரங்கள் உதவா, அவற்றின் பொருள் விளங்காது, தமிழ் மந்திரங்கள் பொருள் விளங்குவன, அவையே அப்பத்தி வழிபாட்டிற்கு உதவும்: இதுவும் அந்நவீனர் கூற்று. நோய்கள் மணி மந்திர மருந்துகளால் தீரும். மாந்திரீகன் நோயாளிமுன் செபிக்கிறன் அச்செபம் பெரும்பாலும் மானதம் அல்லது மந்தமாகவே யிருக்கும் நோயாளியின் காதில் அம் மந்திரமே விழாது. அவன் அதன்பொருள் தெரிவ தெங்கே?

ஆயினும் அவன்நோய் நீங்குகிறது மந்திர சப்தமும் அர்த்தமும் விளங்காத அவன் சுகமடைகிறான் இனி மாந்திரீகருட் பலர் மந்திரங்களைச் செபிப்பர், சக்கரங்களுள் எழுத்துக்களை அமைப்பர். ஆயினும் மந்திரப்பொருளை யெல்லாம் அவர் அறிந்தவர்தாமா? சொல்லமுடியாது எனினும் அவர் செபம் பலிதமே அது கண்கூடு. அந்நவீனர் கொள்கை அவ்வகையில் தளர்கிறது.

மந்திரப் பொருள் விளங்கவே வேண்டுமோ? அந்நியாயம் சம்ஸ்கிருத மந்திரங்களுக்கு மாத்திரந்தானா? தமிழ்மந்திரங்களுக்கு மாகும் அப்போதுதான் அம்மந்திரங்களாலும் மனங்கலந்த பத்திவழிபாடு சித்திக்கும். 'சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் செல்வர் சிவபுரத்தி னுள்ளார்' என்றது திருவாசகம். அதிலுள்ள 'உணர்ந்து சொல்லுவார்' என்பதை நோக்குக. உணரவேண்டுவது எதை? சொல்லவேண்டுவது எதை? உணரவேண்டுவது பொருளை. ஆனால் சொல்லவேண்டுவது பாட்டையே சொல்லுவார் — ஓதுவார். சம்ஸ்கிருத மந்திர விஷயத்திலும் அதுவே கொள்ளற்பாலது அம்மந்திரங்களின் பொருளைத் தெரிக ஆனால் அம்மந்திரங்களையே ஓதுக. பாட்டிற்கு உரை தேடு. அவ்வுரையையே ஓது. பாட்டை விடு என்று அவ்வடிகள் உபதேசிக்க வில்லை.

இனிப் பொருள் தெரிவதெப்படி? பொருள் இரண்டு வகை. இல் என்பது ஒரு சொல். அது இலக்கிய வழக்கு அதற்குப் பொருள் வீடு என்பது. அதுவும் ஒரு சொல்லே அது உலக வழக்கு. அப்படி ஒரு சொல்லுக்கு இன்னொரு சொல்லைப் பொருளாகக் கொள்வது ஒன்று. 'இல் என்பது கல் மண் கட்டை சுண்ணம் முதலியவற்றா லாயதொரு கட்டடம். அதனைப் பொருளாகக் காண்பது மற்றொன்று மூன்றும் வகை யில்லை. சம்ஸ்கிருத மந்திரங்களுக்கு இரண்டாம் வகைப் பொருள் முனைப்புடையவராற் காணமுடியாது. முதல் வகைப் பொருள் தெரியாதிருப்பதையே அந்நவீனர் எடுத்துக் காட்டுவர். எல்லாத் தமிழ்ச் சைவரும் சம்ஸ்கிருதப் பயிற்சி பெறுக அத் தெரியாமை தீரும் அதற்கு அப்பயிற்சி யொன்றே வழி அதுவரை அம்மந்திரங்

களுக்குத் தமிழில் உரைதரச் சொல்லித் தெரிக. தம் சமயத்தின் பொருட்டு அவர் அவ்வளவாவது சிரமப்படுக. அத்திறமுங் கெட்டவர்க்கு வாயேன்? அப்படி எவரும் அம்மந்திரங்களுக்கு எந்தப் பிரதிபதங்களாலும் அர்த்தந் தெரியலாம். ஆனால் அம் மந்திரங்களையே ஓதவேண்டும் மந்திர மென்ற பெயருக்கு அவையே முற்றிலுந் தகுதியுடையன அவற்றின் பிரதி பதங் களும் பின்னபதங்களும் அவை யாகா.

தமிழிற் சைவ நூல்கள் பல எத்தனையோ நூற்றாண்டு களுக்கு முன்னிருந்தே அவை அவ்வப்போது இயற்றப்பட்டன. அவை மங்கலத் தமிழ், சின்மயத் தமிழ், மதுரத் தமிழ், மட மடை யுடைத்து வளர்ந்த தமிழ். அவை செம்பாடல்களாயு மிருக்கும், சிறந்த வசனங்களாயு மிருக்கும். அவற்றின் ஆசிரியன் மார் மனங்கலந்த சிவபத்தி வழிபாடு முதிரப் பெற்றவர். இன் றேல் அன்னநூல்கள் தோன்றியிரா. அவர்பா லிருந்த அப்பத்தி வழிபாட்டிற்கு அவையே சான்று. இனி நூலியற்றுமற் காலஞ் சென்ற சைவரும் எண்ணாற்றவர். அவரெப்படி? அவருள் எத் தனையோபேர் சைவவரம்பு கடவாதவர், சிவதீக்ஷாவான்கள், விபூதி ருத்ராக்ஷ தாரண சீலர், சிவபூஜா துரந்தரர், சைவாலயங் களில் நித்திய நைமித்திகாதிகளை ஆகமமுறையில் நடத்தி மகிழ்ந் தவர், அச்சேவையில் தினந்தோறுந் திளைத்தவர், ஏனைய ஆசாரங்களிலுங் குறையாதவர், இருமொழிச் சைவநூல்களிலும் வல்லவர், சத்தியம் அஹிம்ஸை பரோபகாரம் முதலிய சாதா ரண தருமங்களிலுஞ் சிறந்தவர். இன்னும் என்ன வேண்டும்? அவர் வாழ்ந்த காலங்களில் சைவாலயங்களில் தமிழ் மந்திரங்களா ஓதப்பட்டன? சம்ஸ்கிருத மந்திரங்களே ஓதப்பட்டன. அவை அச்சிவபுண்ணிய சீலரின் மனங்கலந்த பத்திவழிபாட்டைச் சிறிதுந் தகைபவில்லை, பெரிதும் வளர்த்தே வந்தன. அவ்வுண் மையை யாராலும் மறுத்துரைக்க முடியாது.

அது சிலவருடங்களுக்கு முன்வரை யுள்ள நிலை. இப் போது எப்படி? அந்நிலை மாறியது. அந்நவீனர் ஆங்காங்கே தோன்றினர் அவருக்குச் சம்ஸ்கிருத தூஷணமே ஆசைத் தொழில். அதுவே தமிழ்வெறி யாயிற்று அவ்வெறி கொண்ட

சுவடிகள் மலிந்தன. அவற்றில் தமிழ்மொழி ஒரு தெய்வமாகக் கற்பிக்கப்பட்டது பிறமொழிகள் எத்தனை? அவற்றுக் குரியாரு முளர். அவர் அவற்றை அப்படிக் கற்பிக்கவில்லை. அந்நவீனரே தம் சுவடிகளில் அக்கற்பனை செய்தனர். அத் தெய்வத்துக்கே தம் மனங்கலந்த பத்தி வழிபாட்டை அவை சமர்ப்பித்தன அவ்வழி பாட்டிற்கு அர்ச்சனை மந்திரங்கள் வேண்டுமே. அத் தூஷணங் களே அம்மந்திரங்கள் அவை அச்சுவடிகளில் நிரம்பக் கிடைக்கும். அந்நவீனரே அவ்வர்ச்சகர். இப்போது அத்தெய்வமே கானல்நீர் போற் காட்சி யளிக்கிறது. அதனால் சைவசமயம் அந்தர்த்தான மாகி வருகிறது பரமசிவனும் அப்படியே. மனங்கலந்த சிவ பத்திவழிபாடு எங்கிருக்கும்? அதுவுங் குறைகிறது அதற்குக் காரணம் சம்ஸ்கிருத மந்திரமா? அன்று அந்நவீனரின் தமிழ்வெறியே.

அவர் கொள்கைப்படி மற்ற மாகாணங்களின் மக்களுக் கும் அப்பத்திவழிபாடில்லையென்றே சொல்லவேண்டும் ஏன்? அங்குள்ள ஆலயங்களிலும் ஸம்ஸ்கிருத மந்திரங்களே ஓதப்பட்டு வருகின்றன. ஆகவே அந்நவீனர் அவரையும் நிந்தித்தவராகிறார். என்னே அவர்தம் செருக்கு!

ஒரு சமயம் பல மொழிகளிற் பிரசாரமாகும். எச்சமயத் தையும் அச்சமயிகளே பிரசங்கிப்பர். அவருள் சொந்தமொழி பயின்றார் சிலர். அவர் பிரசாரம் அம்மாகாணத்தளவி லடங்கும். சொந்த மொழியும் பிறமொழிகள் சிலபலவும் பயின்றார் சிலர். அவர் அப் பிறமொழிகள் வழங்கும் பிரதேசங்களுக்குஞ் செல்வர். அங்கும் அவர் பிரசாரம் நடைபெறும். ஆயினும் அவ்வொரு மொழி வல்லாரும் பலமொழி வல்லாரும் ஒரே சமயிகளே அச் சமயத்தில் அறிவும் ஆராய்ச்சியும் பற்றும் உடையாரவர். அப் பலமொழி வல்லார் பிரதேசந்தோறுஞ் சென்று அங்கொரு வித மாகவும் இங்கொருவிதமாகவும் பிரசங்கிப்பாரா? உலகெங்கும் கிறிஸ்தவ இசுலாமிய பிரசாரம் நடந்துவருகிறது. அப் பிரசாரகர் தமிழில் ஒருவிதமாகவும். தெலுங்கில் இன்னொரு விதமாகவும், துளுவில் மற்றொரு விதமாகவுமா பிரசங்கிக்கின்றனர்?

இது தமிழ்க்கிறிஸ்தவம், இது தெலுங்குக்கிறிஸ்தவம், இது துளுக்கிறிஸ்தவம் எனப் பேதக் கிறிஸ்தவமுண்டா? எங்கும் ஓரே கிறிஸ்தவம் ஓரே இசுலாம். தமிழ்க் கிறிஸ்தவம் உயர்வு, தெலுங்குக் கிறிஸ்தவம் தாழ்வு, அல்லது இது உயர்வு, அது தாழ்வு என அவ் விருமொழிக் கிறிஸ்தவரும் வாதப்பிரதிவாதங்கள் செய்துகொள்ளார் இசுலாமியரும் அது செய்யார் பிறசமயிகளும் அப்படியே சமயம் ஒன்றானால் அது எம்மொழியிலும் ஒன்றுபோலவே பிரசங்கிக்கப்பட்டிருக்கும். அந்நவீனர் மாத்திரம் விசேடப் பிறவிகள் மொழியை அடிப்படையாக வைத்துச் சமயத்தைப் பிளக்கும் புத்திசாலிகளவர். அதனால் அவர் தமிழ்ச்சைவம் வேறு, சம்ஸ்கிருதச்சைவம் வேறு என்பார். தமிழ்ச் சைவம் வாழ்க, சம்ஸ்கிருதச் சைவம் ஒழிக; தமிழ்ச் சைவ நூல்கள் வாழ்க, சம்ஸ்கிருதச் சைவநூல்கள் ஒழிக; தமிழ்ச் சைவாசிரியன்மார் வாழ்க, சம்ஸ்கிருதச் சைவாசிரியன்மார் ஒழிக. தேவாரம் வாழ்க, சுருதி சூக்திமாலை ஒழிக; சம்பந்தர் வாழ்க, ஹரதத்தர் ஒழிக, சித்தாந்தாஷ்டகம் வாழ்க, பௌஷ்கரவிருத்தி ஒழிக, உமாபதி சிவனார் வாழ்க, அவர் ஒழிக. இவையும் இவை போல்வனவுமே அவர் கோஷங்கள். ஹரதத்தர் ஒழிக எனக் கத்துபவருக்குச் சம்பந்தர் அருள்வாரா? உமாபதி சிவனார் வாழ்க ஒழிக எனக் கத்துபவருக்குப் புத்தி சிறிதாவதுண்டா? சைவம் எந்தெந்த மொழிகளி லிருக்கட்டும், அது ஓரே சமயந்தான். மொழிபற்றி அதை நோக்குவதும், பிளப்பதும், அழைப்பதும் சமயாபிமானமே யாகா. அவற்றில் மொழிவெறியே முனைந்து நிற்கும். சம்ஸ்கிருதச் சைவம் ஒழிக என்றால் சம்ஸ்கிருதம் ஒழிக என்பதுதான் கருத்து. தமிழ்ச் சைவம் வாழ்க என்றால் தமிழ் வாழ்க என்பதுதான் கருத்து. ஆகவே அப்பிளவு அச்சமயத்தை யழிக்கவே உதவும். ஒரு மொழியில் பல சமயங்களின் இலக்கியங்களிருக்கும். அதனால் இந்நூல் சைவத்தமிழ், இந்நூல் வைணவத் தமிழ், இந்நூல் சமணத்தமிழ் எனப் பிரித்தற கிடனுண்டு. அப்பிரிவால அம்மொழி பாதகமுறாது. ஆனால் ஒரு சமயம் மொழிதோறும் வேறுவேறாதலில்லை. அந்நவீனரின் புத்தியே பிளந்தது. இப்போது மனங்கலந்த சிவபத்தி வழிபாடு குறைவே. அதற்குக் காரணம் அப்பிளவைப் புத்திதான்; சம்ஸ்கிருத மந்திர மன்று.

வைணவத்தையும் தமிழ் வைணவம் சம்ஸ்கிருத வைணவம் என அவர் பிரித்துப் பேசுவர். அப்பேச்சைத் தமிழ்வைணவர் சிறிதும் மதியார்.

சம்ஸ்கிருத மந்திரத்தால் நாத்திகம் பரவுகிறதாம்: அந் நவீனர் சொல்கிறார் தமிழில் மந்திரமு மில்லை, அது சைவாலயங் களில் எக்காலத்திலும் ஓதப்பட்டதுங் கிடையாது. அவ்வாலயங் கள் தோன்றியது என்று அன்றுமுதல் இன்றுவரை அங்குச் சம்ஸ் கிருத மந்திரமே ஓதப்பட்டுவருகிறது. சைவரான தமிழர் என்றி லிருந்து சைவராயினர் அன்றிலிருந்து இன்றுவரை அவர் வீடு களில் கலியாண முதலிய பலவேறு சைவக்கிரியைகள் நடந்துவரு கின்றன. அவற்றில் ஓதப்படுவதும் அம்மந்திரமே ஆகலின் நாத்திகம் அன்றுமுதலே பரவியிருக்கவேண்டும். அஃதில்லை அது பரவத் தலைப்பட்டது சமீப காலத்திற்றான். மற்ற மாகாணங் களிலும் அம்மந்திரமே ஆட்சி புரிகின்றது. நாத்திகம் அங்குப் பரவவில்லை ஏன்? அங்கும் பரவியிருக்கிறதென்னலாமவர். அதற்கு மாற்றாக மாகாணமொழி மந்திரக் கிளர்ச்சி அங்கும் நடைபெறவேண்டும். அஃதில்லை. அன்றியும் நாத்திகம் பரவி யிருப்பது பாமரரிடமா? படித்தவரிடமா? படித்த சிலர்தான் அப்பிரசாரஞ் செய்கின்றனர். அவர் புத்திதான் திருந்தவேண்டும். அதற்கென் செய்வது? தமிழில் ஆத்திக நூல்கள் பல. அவற்றை அவர் படிக்கலாம் அதனால் அவர் புத்தி தெளியும். இன்றேல் அது தமிழ் மந்திரத்தாலுந் தெளியாது. ஆகவே நாத்திகம் பரவு தற்குச் சம்ஸ்கிருத மந்திரங் காரண மன்று.

தமிழச் சைவருக்குத் தமிழுஞ் சம்ஸ்கிருதமும் இரண்டு கண். தெய்வீக சைவ நூல்கள் அவ்விரண்டிலு முள. ஆகலின் சைவம் அக்கண்ணொளி. 'ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயன்' என்றது திருமுறை. அப்பயனாவது சைவசமயமே அச்சைவருக் குச் சம்ஸ்கிருதத் துவேஷத்தை ஊட்டுக: அம்மொழியிலுள்ள சைவநூல்கள் தெரியாமற் போம். அவர் அவற்றைத் தெரிந் தாலும் மதியார், தொடார், அம்மொழிமேற் கொண்ட பகை மையாற் பழிக்கவுஞ் செய்வர் அவருடைய கண்ணொன்றை அப்

படிப் பொட்டை யாக்குவர் அந்நவீனர். அச்சைவருக்குத் தமிழ் வெறியை ஊட்டுக: அம்மொழிச் சைவநூல்களிலுள்ள தமிழே இனிக்கும், சைவத்திற் சுவை தட்டாது. அப்படி அவருடைய மற்றொரு கண்ணையும் அந்நவீனர் பொட்டை யாக்குவர். அவ்விரு வகையாலும் அச்சைவரின் கண்ணொளி முழுக்க மறையும் அவர் 'ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயனறிகிலா அந்தக' ராவார் அவர் நாத்திக ராதல் எளிது. ஆகவே நாத்திகம் பரவுதற்குக் காரணம் யாது? அதுதான் அந்நவீனரின் அத்துவேஷ வெறிப் பிரசாரங்கள். கருப்புச்சட்டைக் கூட்டமே அதற்குச் சான்று. அந்நவீனராலேயே அக்கூட்டம் தலையெடுத்து ஆடிவருகிறது. சம்ஸ்கிருத மந்திரத்தால் நாத்திகம் பரவவில்லை. தமிழச்சைவர் இருமொழிச் சைவநூல்களையும் பயிலட்டும் அவரால் நாத்திகம் இருந்தவிடந் தடந்தெரியாமற் போம்.

அந்நவீனர்போல் நாத்திகரும் தமிழர்ச்சனை வேண்டுமென்கிறார். அந்நவீனரின் உள்ளம் பூரிக்கிறது ஆனால் அவ்வர்ச்சனையால் மனங்கலந்த பத்திவழிபாடு உண்டாகும், நாத்திகந் தொலையும், ஆத்திகம் வளரும் என்பது அந்நவீனர் கருத்து. அஃதுண்மையா? ஆயின் அவ்வர்ச்சனை நாத்திக வளர்ச்சிக்குத் தடையே. அதை நாத்திகர் எதிர்க்க வேண்டும்; ஆனால் ஆதரிக்கிறார். ஏன்? அது அகில பாரத சைவ சமூகத்திலிருந்து தமிழச் சைவரைத் துண்டித்துவிடும். எருதுகள் தனித்தனி யாமாறு பிரிக்கப்பட்டன. புலி தன் காரியத்தைப் பார்த்துக்கொண்டது. அக்கதை பிரசித்தம். அப்படியே நாத்திகப் புலிக்குத் துண்டிக்கப்பட்ட அத்தமிழச் சைவ எருதுகள் இரைதான் அந்நவீனர் அதை யறியார். அவ்வர்ச்சனை வந்துவிட்டால் அந்நாத்திகரும் ஆத்திக ராய்விடுவராம்: அப்படிச் சொல்கிறார் அவர். அது சைவ மக்களை ஏய்க்கவே யாம் அவ்வர்ச்சனைக் கொள்கை முழு நாத்திகம். ஆத்திக வாசனைதானும் அதிலில்லை. ஒரு சமயக் கொள்கையை இன்னொரு சமயி ஆதரித்தால் ஆதரிக்கிற சமயிதான் அக்கொள்கையை யுடைய சமயத்திற் போய் வீழ்கிறான். அக்கொள்கையை யுடைய சமயத்தைச் சேர்ந்தவன் ஆதரிக்கிறவனுடைய சமயத்திற் போய் விழவில்லை. அதனை யறிக. அம்

முறையில் அந்நவீனரே அவ்வர்ச்சனைக் கொள்கையை யாதரித்து நாத்திகச் சேறறைப் பூசிக்கொள்கிறார் அதனால் நாத்திகத்துக்கு இரை அதிகங் கிடைக்கும். நாத்திகர் மகிழ்வர், ஆனால் ஆத்திக ராகார். இன்றைம் தமிழர்ச்சனை யென்பதில நாதிகர் விரும்புவது தமிழே, அர்ச்சனை யன்று. அந்நவீனரும் அப்படியே. ஆகலின் அவர் அந்தரங்க நாத்திகரே.

பாமரத் தமிழர் சிறுபகுதியினரா? அவருக்குத் தமிழாவது எழுதப் படிக்கச் சரியாய்த் தெரியுமா? அவர் சம்ஸ்கிருதம் படிப்ப தெங்கே? அவர் தம் கொச்சைத் தமிழிற்றானே இறைவனை வேண்டுவர்? அவன் அதனைக் கேளானா? அவருக்கருளானா? அவருக்காகச் சம்ஸ்கிருத மந்திரத்தை ஏன் விடான்? இப்படி வாதிப்பர் அந்நவீனர். பாமரர் பண்டிதர் எல்லாருமே தம் குறைகளைக் கொச்சைத் தமிழிற்றான் முறையிடுவர். அது இன்றும் நடைபெற்றே வருகிறது. இறைவன் அதற்கிரங்கானென யாருஞ் சொல்லவில்லை. ஊமைகளுக்குக் கொச்சைத் தமிழும் வராது. அவரும் முறையிடுகின்றனர், அவ னருள்வது முண்டு. அதனைக் காட்டிக கொச்சைத் தமிழ் மந்திரமும் வேண்டாமென்றால் அந் நவீனர் என் செய்வர்? பாமரத் தமிழருக்குத் திருமுறைகளுந்தான் ஏன்? அம்மந்திரங்களும் வேண்டாம் அவர் கொச்சைத் தமிழே அவருக்குப் போதும் மனங்கலந்த பத்தி வழிபாடு நிச்சயம். ஆனால் திருமுறை மந்திரங்களால் அர்ச்சிக்க வேண்டுமாம் அந்நவீனர் சொல்கிறார். அதனால் அப்பாமரத் தமிழரை அவரும் புறக்கணித்தவராகிறார்.

மேலும் சம்ஸ்கிருத மந்திரத்தை வெறுப்பவர் பாமரரா? அல்லர். அந்நவீனரே. அவர் பாமரத் தமிழருக்குப் பரிவு காட்டுவதுபோல் நடிக்கின்றனர். அவ்வழிபாட்டிறகு அம்மந்திரம் தடை: அப்படி அப்பாமரரைக் கொண்டும் சொல்விக்க வேண்டும். தம் கொள்கை வலுக்கும், அவர் நம்பிக்கை அது. அதற்கே அந்நடிப்பு உதவுகிறது. ஆனால் குரான் முதலில் அரபு மொழியில் தோன்றியது இப்போது அதற்குப் பல பெயர்ப்புகளுள. உலகத்து

இசுலாமியரும் பல பாஷையினர், அவருள்ளும் பாமரரே பலர். ஆயினுமென்? அத்தனை கோடிப்பேரும் பயபக்தியுடன் ஓதியும் மதித்தும் வருவது அரபுமொழிக் குரானே. உலகெங்குமுள்ள கத்தோலிக்கரும் பல மொழிகளுக் குரியர்தான். அவருள்ளும் பாமரர் வெகுபேர். இலத்தீன் அச்சமயத்துப் பாஷை. அவரெல்லாம் தம் சமய விஷயத்தில் அம்மொழி வாக்கியங்களையே போற்றுகின்றனர் குரானை வெறுக்கிற பாமர இசுலாமிய ருளரா? இலத்தீனை வெறுக்கிற கத்தோலிக்கப் பாமர ருளரா? அப்படியே சம்ஸ்கிருத வேத மந்திரங்களை வெறுக்குந் தமிழச்சைவப் பாமரரும் இலர். அவர் அவற்றை மதிக்கவே செய்வர் 'அவன் சொல்வது வேத வாக்கா? வேத விதியா? நான் ஏற்றுக் கொள்ள' என்பது உலக வசனம் அதுவே இன்றும் சான்று. அவ்வேதாகமங்களும் அவரைப் புறங்கணிக்கவில்லை. அவர்பால் வைத்த கருணையாலேயே அவை தோன்றின. அவற்றைக் கற்க அவ்வுண்மை புலனும். மேலும் அவற்றுக் காசிரியர் பரமசிவனுர். அவரொருவரே பரமாப்தர் அவரைக் காட்டிலுமா அந்நவீனர் கருணை யுடையார்? ஆறல் அப்பரமசிவனுர் கற்றவர் விழுங்குங் கற்பகக்கனி, கல்லார் நெஞ்சில் நில்லார் அவ்வுண்மையை மறுக்க முடியாது. ஆயினும் அவர் பாமரரைப் படிப்படியா யேற்றிப் பண்டித ராக்கியே அவருள்ளத்தில் விளங்குவார்

உலகில் இரண்டு சமயங்களைக் கலக்க முடியுமா? அவற்றை ஒரேசமய மாக்க முடியுமா? அவை எவனாலும் முடியா. அவ்விரண்டு சமயங்களையும் அக்கலவை யழிக்கும். இன்றேல் அக்கலவை மூன்றுஞ் சமய மாகும். அப்படியிருக்க எல்லாச் சமயங்களையுமே கலக்க வேண்டுமாம்: அந்நவீனர் சொல்கிறுர். அஃதாவதென்னை? அவற்றையெல்லாம் அழிக்க வேண்டுமென் பதே யாம், அல்லது சமயங்களின் எண்ணைப் பெருக்க வேண்டுமென்பதாம், அல்லது அக்கலவையில் ஏதேனுமொரு சமயத்தைக் கரவாகப் புகுத்த வேண்டுமென்பதாம். அதில் மற்றொரு குறையுமுண்டு. என்னை? எல்லாச் சமயங்களுக்கும் அடிப்படை யொன்றே, ஆதலின் எவரும் எச்சமயத்தையும் ஆசரிக்கலாம்:

அவர் சொல்வ தது. அதுதான் அவருடைய சமரசப் பிரசங்கம். அச்சமரசம் அவருக்கு வெகுப்பிரிய மானது. அச்சமரசமாவது யாது? அதுதான் விபசாரம். சமய விபசாரமே சமய சமரசம். வரம்பழியாத சைவாசார முடையார் பலர். அவரெல்லாம் சைவ சமய வெறியராம்: அவர் பிதற்ற லது. கற்பு வரம்புள் நிற்பாள் ஒருத்தி. அதனுல் அவள் ஓரே கணவன்பால் ஆசை கொண்டவள். அவளை அக்கணவன்பால் வெறிகொண்டவள் என்னலாமா? அப் படிச் சொல்லிப் பரிகசிக்கிறுன் இன்னெருத்தி. அவள் எப்படிப் பட்டவளா யிருப்பாள்? அப்பரிகாசம் போன்றதே அப்பிதற்ற லும். அதனுல் சூழ்நிலை கீழ்நோக்கியது. அதறகிரையானுர் அச் சைவருட் சிலர். அவர் அச்சமரச பதத்தைக் கேட்டனர். அது கௌரவார்த்த முடையதுபோல் அவர்க்குப் பட்டது. அன்றியும் சைவப் பிரமாண சாத்திரங்களை அவரால் அறிந்துகொள்ள முடியவில்லை. ஏன்? அந்நவினருக் கேற்ற சுவடிகள் பல. அவற்றையெல்லாம் அவர் பிரமாணங்களெனக் காட்டினர். அத னுல் சைவசமய வரம்பு கலகலத்தது. மேலும் சாத்திர வரம்புள் நின்றே சைவத்தை யாசரிக்கவேண்டும் அதுதான் சைவக்கற்பு. அக்கற்பைக் காத்தலும் அச்சைவருக்குக் கஷ்டமா யிருந்தது. சூழ்நிலையும் அக்கஷ்டத்துக் கேற்புடைய தாயிற்று. ஆகையால் அச்சைவரும் அவ்விபசாரத்தி லிறங்கினர். 'அழிந்த பிறகு அண்ணனேடு போனு லென்ன? தம்பியோடு போனு லென்ன?' அது பழமொழி. அவர் அதைப் புதுக்கினர். அவருட் சிதற லுண்டாயிற்று. சமய மாற்றத்துக்குக காரணம் பலவாகலாம். ஆனுல் சைவருள் வேறுசமயங்களிற் புகுவார்க்கு அவ்வரம்பின் கலகலப்பே காரணம். அச்சிதறியவர் வேறு சமயங்களிற் புகுந்தனர். ஒரு சிலர் நாத்திகரு மாயினர் அதிலென்ன விநோதம்? மேலும் அவரெல்லாம் சைவத்தைவிட்டு வெளியேறியவர். விபசார பிரதி பத மாகிய அச்சமரசம் அம்மட்டில் ஓயவில்லை. சைவசமயமாகிய கிருகத்தில் இருந்துகொண்டே சமயவிபசாரஞ் செய்வாரு முளர். அச்சோரரும் எண்ணற்றபேர். அவரையும் அது சிருட்டித்து விட்டது. அநியாயம்! இப்படியிருந்தால் நாத்திகம் ஏன் பரவாது? மனங்கலந்த சிவபத்தி வழிபாடு எங்கிருந்து வரும்? அத்தனை

கேட்டுக்குங் காரணம் எது? அந்நவீனரின் அச்சமரசக் கொள்கையே. ஆனால் அக்கேடு சம்ஸ்கிருத மந்திரங்களால் வந்ததாம்: அவர் சொலகிறார். அது பொய்.

சைவ சமயந் தோன்றியது என்று அன்றே அதன் அனுட்டானத்துக்குரிய விதிநியமங்களுந் தோன்றியிருக்க வேண்டும். அது முந்தியும் அவை பிந்தியுந் தோன்றா. அதையாக்கிய பரமசிவனாரே அவற்றையும் ஆக்கினார். அவற்றைவிட்ட மாந்தர் அதனையும் விட்டவரே. தமிழ் மந்திரக் கொள்கைக்கு மூல வசனமே யில்லை. சமீப காலத்துத் தமிழ்வெறியின் விளைவே அக்கொள்கை. அதனால் சம்ஸ்கிருத மந்திரங்களைப் பெயர்த்துக் கோடல், திருமுறைப்பகுதிகளை மந்திரங்களெனக்கோடல், புதுத் தமிழ் மந்திரங்களைச் சிருட்டித்துக் கோடல் ஆகிய குழப்பங்கள் தலைதூக்கின. அக்கோடல்கள் பொருந்துவனவே யாகுக. அவற்றைச் செய்துகொடுப்பதற்கு அதிகாரிகள் வேண்டும். அவராவார் யார்? தனி மனிதரா? குழுவினரா? அவ்வதிகாரத்துக்கு வேண்டப்படுந் தகுதி யாது? அஃதவரிட முண்டா? அவ்வதிகாரம் அவருக்கு எங்கிருந்து கிடைத்தது? மக்களிடமிருந்தா? ஆமெனின், இப்போது சம்ஸ்கிருத மந்திரங்கள் வழக்கத்தி லிருந்துவருகின்றனவே; அவையும் அக்காலே அப்படித்தான் வந்தனவா? எதிர் காலத்திலும் சைவமக்கள் தோன்றுவர். அவருந் தமக்கிஷ்டமான அதிகாரிகளை நியமிக்கலாம். முந்தையோர் கொடுத்த மந்திரங்களை அப்பிந்தையோர் மாற்றுவர். அம்மாறுதல் அடிக்கடி நேரக்கூடும். மந்திரங்களே வேண்டா மென்கிற கட்சியும் உருவாகலாம். அதுவும் பெரும்பகுதி வாக்குச் சீட்டுப் பெறமுடியும்: அதனால் மந்திரங்களென்பதே மறையும். அவை வல்லாரும் இல்லாமற் போவர். சைவாசாரத்துக்குப் பிரமாண சாத்திர சம்மதந் தானே வேண்டும். வெகுஜன சம்மதமும் ஏன்? சாஸ்திரம் ஸ்திரமா? ஜனம் ஸ்திரமா? அவற்றுள் பிரதானமாவதும் எது? அவ்வதிகாரிகள் செய்தனவற்றை மந்திரங்களென ஏலாதாருமிருப்பர். அவரை யார் என் செய்வர்? அவரவர் தத்தமக் கிஷ்டமான மந்திரங்களை யாக்கிக்கொண்டா லென்னை? இன்னும் அவ்வதிகாரங் கொடுத்தவர் பாமரரும் பண்டிதருமா? பண்டிதர்

மாத்திரமேயா? பண்டிதரே யெனின் அவர் தமிழ்ப் பண்டிதரா? சைவ பண்டிதரா?

## 10. சம்ஸ்கிருத மந்திரங்கள்.

சந்திராங்கத னென்பா னொருவன், அவன் இவ்வுலகத் தரசன். அவன் நாகலோகஞ் சென்றான். நாகராசனும் அவனும் சந்தித்தனர். அந்நாகராசன் அவனை நோக்கி "நீங்கள் திறந் தெரிந் தேத்துந் தேவன் யார்? என்றான்'. அதற்கவன் 'கங்கையை முடியிற் சூட்டிக் கவுரியைப் பாகம் வைத்துப்-பொங்கர வங்க டம்மைப் புரிகுழை யணிந்து பாதச்-செங்கமலத்தை வேதச் சிரத்தினி லிருத்தித் தேவ-ரங்கைகள் கூப்ப நின்ற வவனெம்மை யளிக்குந் தேவே' என்று விடை கொடுத்தான். உடனே அந்நாக ராசன் 'சிறியனீ யாயு மென்முன் சிவனது தகுதி யெல்லா-மறி வுற மொழித லாலே யருங்களி யெய்து கின்றேன்' என்று கூறி மகிழ்ந்தான். சந்திராங்கதனுக்குப் பல வரிசைகளுங் கிடைத்தன. இச் செய்தியைச சைவசமய சிரோமணியாகிய வரதுங்கராம பாண்டிய மகாராசர் தெரிவிக்கிறார். இதனால் சைவசமயத்தின் வியாபகம் புலனாகும்

பிரமனுலகம், விட்டுணுவுலகம், இந்திரனுலகம் முதலிய வுலகங்கள் பல. அவை சாத்திரப் பிரசித்தம். அங்கும் சீவவர்க்க முண்டு. பாஷை யிருக்கும். அப்பாஷை ஒன்றே யாகலாம், பலவு மாகலாம். அவ்வுலகங்களின் தலைவன்மாரும் ஏனைச் சீவரும் இப் பாரத தேசத்துக்கு வருவர். இங்குள்ள சைவாலயங்களில் பரமசிவ னாரை ஏத்தித் தொழுவர். அஃதென்று முள்ள வழக்கம். 'முந்திய தேவர் கூடி முறைமுறை யிருக்குச் சொல்லி...... இமைய வர் பரவி யேத்த', 'வேதங்கள் நான்குங் கொண்டு விண்ணவர் பரவியேத்த', 'இந்திரன் பிரமனங்கி யெண்வகை வசுக்களோடு- மந்திர மறைய தோதி வானவர் வணங்கி வாழ்த்த', வானவ ரிருக்கொடும் பணிந் தேத்த விருந்தவன்', 'அருமறையால் நான்முகனும் மாலும் போற்றுஞ் சீரானை', 'புடைசூழ்ந்த பூதங் கள் வேதம் பாட', 'அண்டர்தமக் காகமநூல் மொழியும்'

என்றது திருமுறை. அவ்வேதாகமங்கள் சம்ஸ்கிருதமே. அவ் வானவ ரனைவரும் அம்மந்திரங்களைச் சொல்லியே துதிக்கின் றனர். அவ்வடிகளிற் காண்க அரக்கரும் இருக்கு மந்திரங் கொண்டே துதித்தார். 'முன்கைமா நரம்பு வெட்டி முன்னிருக் கிசைகள் பாட', 'மந்திரத்த மறைபாட வாளவனுக் கீந்தான்' என்ற திருமுறை காண்க அவ்வடிகளில் இராவணன் செய்தி கூறப்பட்டது. இவற்றால் சைவசமயத்தின் வியாபகம் புலனுவ தோடு வேதசிவாகமங்களின் வியாபகமும் புலனுகும். 'எண்டி சைகள் கீழுலக மேலுலக மெங்கு—மண்டுமறை யன்றியில் வழங் குவ......' எனப் புராணமும் அதை யாதரிக்கிறது.

சம்ஸ்கிருதம் விண்ணுலகத்துக்கும் பொது என்றது நன்னூல் விருத்தி. அதற்கு மூலவசனங்கள் வேண்டுமே. மேற் காட்டிய 'முந்திய தேவர்' என்றது முதல் 'அண்டர் தமக்கு' என்றது வரையுள்ள திருமுறை யடிகளே அவை. இன்னும் கலை விளங்கிய மக்களும் வானவ ராதியோரும் சந்திக்க நேரும். அப் போது அவர் அம்மொழியிற்றன் பேசிக்கொள்வர். தமயந்தி சுயம்வரம் நடந்தது. அதில் பலநாட் டரசகுமாரரும் வானவருங் கூடினர். அவர் பேசிக்கொண்டது அம்மொழியே. அதை இரு மொழி நைடதத்திலுங் காண்க. இதனுல் சம்ஸ்கிருதத்தின் வியா பகமும் புலனுகும். ஆகவே அகில புவனங்களுக்குமே உரியதாகிய சைவசமயத்தின் சர்வபிராமண நூல்களாகிய வேதசிவாகமங்களை அப்புவனங்களுக்கும் பொது மொழியாகிய சம்ஸகிருதத்தில் அச் சமய முழுமுதற் கடவுளாகிய பரமசிவனு ரருளிச் செய்தார். இப் பேருண்மை அந் நவீனர் தலையில் ஏறுமா? அவர்தான் தமிழ்வெறி கொண் டலைகின்றனரே.

இனிக், காசுமீரச் சைவர் இராமேசுரத்துக்கு யாத்திரை வருவர். இராமநாதாலயத்தில் மந்திரங்கள் ஓதப்படும். அவருக்கு அவற்றின் பொருள் தெரிந்திருக்கவேண்டும். தமிழகச் சைவர் காசிக்கு யாத்திரை போவர். விசுவநாதாலயத்திலும் அவை ஓதப்படும். அவருக்கு அவற்றின் பொருள் தெரிந்திருக்கவேண் டும். அவ்விரண்டாலய மந்திரங்களும் பொதுவாய தொரு,

மொழியி லிருந்தாற்றான் அது சாத்திய மாகும். சைவாலயங்கள் எல்லா மாகாணங்களிலு முள. அங்கெல்லாம் மந்திரங்கள் ஓதப் படும் அவற்றின் பொருளுந் தெரிந்திருக்கவேண்டும் அதற்காக அம்மொழி அம்மாகாணங்களுக்கும் பொதுவா யிருத்தல் நல்லது. சம்ஸ்கிருதமே அப்படி யிருப்பது ஆகலின் அம்மொழி மந்திரங் களே சகல சைவாலயங்களிலும் ஓதப்பட்டு வரலாயிற்று. திருப் பழூர் என்பது ஒருதலம் அவ்வூர்ச் சிவாலயத்தில் 'அந்தணர்க ளானமலை யாளரவ ரேத்' துகின்றனர். அவர் சொந்தமொழி மலையாளம். ஆயினும் அம்மொழி மந்திரங்களை அவர் அங்கு ஓதவில்லை. 'வேதமொழி சொல்லி (அம்) மறை யாளரிறை வன்றன் பாதமவை யேத்' தியே அர்ச்சிக்கின்றனர். வேதமொழி— சம்ஸ்கிருத மந்திரம். திருச்செந்தூர் முதலிய சில ஆலயங்க ளுள. அங்கு அம்மலையாளர் வந்து அர்ச்சிக்கின்றனர். அஃதெப்படியோ நேர்ந்துவிட்டது. ஆனால் அங்கும் அவர் ஓதுவன சம்ஸ்கிருத மந்திரங்களே. அதையுங் காண்க.

மாகாணந்தோறும் சைவாலயங்க ளுள. அவற்றை அவ்வம் மாகாணத்துச் சைவமக்கள் தம் பொருட்செலவில் நிரு மித்திருக்கலாம். ஆயினும் அவ்வெல்லா வாலயங்களும் வேத சிவாகம விதிப்படிதான் நடந்துவரும். ஒன்றிரண்டில் அவ்விதி சிறிது திறம்பியிருக்கலாம் அவற்றைத் திருத்திக்கொள்ள வேண்டும். அவ்வாலயங்களின் பொருட்செல்வம் அவ்வம் மாகா ணத்துச் சைவமக்களுக்கே உரியதாகுக ஆனால் ஒரு மாகாணத் துச் சைவமக்களுக்கு மற்ற மாகாணங்களிலுள்ள சைவாலயங் களும் சேவாயோக்கியமா யிருந்துவர வேண்டும்; இருந்தும் வரு கின்றன. அவருக்கு அவற்றைச் சேவிக்கு முரிமை மறுக்கப்படவுங் கூடாது; மறுக்கப்படவுமில்லை. அவை வேதசிவாகம முறையில் நடந்துவருவதே அதற்கு அனுகூலமாம். அவ்வளவில் அவ் வெல்லா மக்களுக்கும் அவ்வெல்லா வாலயங்களும் பொதுவுடை மையே. அதில் தடையிருக்க முடியாது.

இன்னும் இராமன் வடநாட்டான். அவன் பிரதிட் டித்த சிவலிங்கமே இராமநாதர் நளனும் வடநாட்டானே.

அவனே திருநள்ளாற்றுச் சிவாலயத்தைக் கண்டான். இந்திர லோகத்தாரே திருவாரூர்த் தியாகராஜர். சம்ஸ்கிருத வேதம் பிரதிட்டித்ததே திருமறைக்காட்டுச் சிவலிங்கம். தமிழகத்துக்கு வெளியே ஈசான திக்கிலிருந்து வந்தவரே பாண்டியன் மகளை மணந்து சோமசுந்தரபாண்டியரென மகுடந் தரித்துத் தென்னாடுடைய சிவனாகித் திருவாலவாய்ச் சொக்கலிங்க ரானார். விநாயகர் வடநாட்டுத் தெய்வமாம் அதனை மெய்யெனக் கொண்டால் அவரும் வடவரே. அவ ரியற்றியதே திருச்செங்காட்டங்குடிச் சிவாலயம் கந்தபுராணக் கந்தரும் வடநாட்டவராம் அதை யொத்துக்கொண்டால் அவ்வடவர் செய்தது திருச்சேய்ஞலூர்ச் சிவாலயம் பிரமன் விட்டுணு இந்திரன் முதலியோர் வேறுலகத்தவர். அவர் இத்தமிழகத்தி லாக்கிய சைவாலயங்களும் பல. அவ்விராமன் முதலியோர் தமிழ ரல்லர், தமிழு மறியார். ஆயினு மென்? அவரெல்லாம் சைவசமயத்தினர். பாரத தேச முழுவதும் சைவந்தான். ஆதலால் அவருக்கும் அச்சமயம் பற்றித் தமிழகமும் உரிய தாயிற்று இங்கும் அவ்வாலயங்களை அவர் ஆக்கினர். சில சைவாலயங்கள் விண்ணிழி விமானங்கள். தமிழகத்துக்கும் அதிலுள்ள சைவாலயங்களுக்கு முள்ள தொடர்பு இவ்வளவுதான் ஆனால் அவ்வாலயங்க ளனைத்தும் எல்லாச் சைவருக்கும் பொதுவுடைமை. அதனால் தமிழச்சைவர் அவற்றை அவ்வப்போது புதுப்பிக்கின்றனர். எப்போதும் சேவிக்கின்றனர். அவ்வுரிமை அவருக்குக் கிடைப்ப தாயிற்று. அச்சைவர் தம்மைத் தமிழரென்று மாத்திரஞ் சொல்லிக்கொள்ளட்டும்: அப்போதே அவருக்கு அவ்வுரிமை போயிற்று. அவர் அவற்றுக்கு வெளியிற்றான் நிற்கவேண்டும். மீறுவது பலாத்காரமே. அவற்றின் பொருட் செல்வம் அவருடைய தன்று, சைவருடையதே. தமிழருடையதென வாதிப்பாரு மிருக்கலாம் ஆயினும் அது சைவசமயத்துக் கெனவே கொடுக்கப்பட்டு விட்டது. பிறகு அவர் அதில் உரிமைபெற முடியாது. அவர் சைவசமயத்தவராகுக அவ்வுரிமை பெறலாம்.

மாகாண மொழி மந்திரக் கிளர்ச்சிக்கு மூலம் சமயாபிமான மன்று, மொழிவெறியே. அவ்வாலயங்கள் பொதுவுடை

லம்பர யிருந்துவருவதை அம்மந்திரம் அடியோடு கெடுத்துவிடும். எப்படி? அம்மந்திரம் புகுத்தப்படட்டும்: தமிழகச் சைவருக்கு ஆந்திரச் சைவாலயங்கள் சேவாயோக்கிய மாகுமா? ஆகா. ஏன்? அங்குத் தெலுங்கு மந்திரம் புகுந்திருக்கும். அவருக்கு அம்மந்திரப் பொருள் விளங்காது. ஆந்திரச் சைவருக்குத் தமிழகச் சைவாலயங்கள் சேவாயோக்கிய மாகுமா? ஆகா. ஏன்? அங்குத் தமிழ் மந்திரம் புகுந்திருக்கும். அவருக்கு அம்மந்திரப் பொருள் விளங்காது. இப்படியே பிறவும். அப்போதும் அவை பொதுவுடைமையாகவேண்டும்: என் செய்வது? ஒவ்வொரு மாகாண மொழிக்குரிய சைவரும் எல்லா மாகாணங்களின் மொழிகளையுங் கற்க வேண்டும். அது முடியுமா? மேலும் அது தேளுக்கஞ்சிப் பாம்பின் வாயிற்பட்டது போலாம் ஆகவே ஒரு மாகாணத்துச் சைவருக்குப் பிறமாகாணங்களிலுள்ள நூறறுக்கணக்கான சைவாலயங்கள் சேவாயோக்கிய மாகாதபடி அம்மந்திரங் குறுக்கிடுகிறது. அது சைவசமயத்துக்குப் பெருங்கேடு. அக்கேட்டுக்குப் பாமரரும் பண்டிதருமே யிரையாவார். பாமர சகாய நவீனர் அதை யோரார். ஆனால் சம்ஸ்கிருத மந்திரங்களை ஓதுக. அக்கேடில்லை. அவ்வோதுகையில் சிவ சங்கர சம்பு ஹர உமா பார்வதி விநாயக சுப்ரமண்ய முதலிய சப்தங்களாவது எங்கும் ஒன்றுபோல் ஒலித்துக்கொண்டிருக்கும். பாமரர் அவற்றைக் கேட்டு மகிழ்வர். அதுவே அவருக் கிலாபம்.

தமிழ் மந்திரப்பித்து அந்நவீனரை அவ்வளவில் விடாது. அம்மந்திரத்துக் கியைந்த கிரியைகள் வேண்டும். இப்போதுள்ள கிரியைகள் இயையா. அவற்றையுந் தாறுமாறு செய்ய அப்பித்துத் தூண்டும் சைவாலயங்களில் திருவுருவங்கள் பல. அவர் அவற்றுட் சிலவற்றை அகற்றுவர், சிலவற்றை மாற்றுவர். புதிய சிலைகளையும் நடுவாரவர். அவற்றுக் கெல்லாஞ் சிறப்பொடு பூசனை வேண்டுமே. அதற்கு விதியேது? முறையேது? அவர் வைத்ததே வரிசை. ஆகவே அச்சிறப்பும் பூசனையுஞ் சீர்குலையும் இனிப் பாவனையின் கதியென்ன? சிவோகம்பாவனை விடைபெற்றுக்கொள்ளும் அவர் தமிழோகம்பாவனையை வரவேற்பர். சிவோகம்பாவனை செய்வார் சைவர். அப்பாவனைக்கு முத்தித்

தானம் சிவலோகம். அவர் அங்குச் செல்வர், பிறகு மீளார். தமிழ்மோகம்பாவனை செய்வார் அந்நவீனர். அப்பாவனைக்கு முத்தித்தானம் தமிழுலகம். அவருக்கு இலயமே யிராது. ஏன்? இலயித்தாலும் அவர் மீண்டும் இங்குத்தான் வருவார். அவருடைய போக்குவரவுக்கு முடிவே யில்லை. மீளாப் போக்கிடம் அவருக் கேது? அவ ரதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். அவ்வதிர்ஷ்டம் பிறமொழிச் சைவருக்கும் வரவேண்டும்: அந்நவீனரின் கருணையுள்ளம் அது வந்தால் அச்சைவருக்கும் அவர் மாகாணங்களுக்குமுள்ள பந்தத்துக்கும் அந்தமில்லை. இப்படி அந்நவீனரால் வேதாகமோக்த மந்திரங் கிரியை பாவனைகளெல்லாம் நாசமாகும். அம்மட்டோ? தீர்த்த யாத்திரை தல யாத்திரை முதலியவும் சிவபுண்ணியங்கள். அவற்றிலும் அவர் கொள்ளி வைப்பவரே.

சைவாலயங்களென்பது சமயம்பற்றிய பெயர். மாகாண மொழி மந்திர நுழைவால் அப்பெயர் மறையும். தமிழாலயங்கள் தெலுங்காலயங்கள் முதலிய பெயர்களே பெருவழக்காய் விடும். அவை மொழிபற்றிய பெயர்கள். அந்நவீனர் மொழிக்கே முதலிடங் கொடுப்பர். அச்சமய நிலயங்கள் அப்படிப் பாஷா நிலயங்களாக மாறலாமா? அதற் கிடங்கொடுப்பதுதான் சமய சேவையோ? அன்று அன்று. சமயத்தைப் பாஷையின் கால் மாட்டிற் கிடத்திப் படுகொலை செய்வதே அது. சம்ஸ்கிருதத்துக்கென ஒரு மாகாணமோ இனமோ குலமோ இல்லை. சமயம் பற்றியே அம்மொழி மந்திரங்கள் எங்கும் அங்கீகாரமாயின. ஆகலின் சம்ஸ்கிருதாலயங்க ளென்ற பெயர் வராது. நாளிது வரை அப்பெயர் வழங்கவு மில்லை. சைவாலயங்க ளென்ற பிரசித்தமே எங்கு மாம்.

சைவாலயங்கள் வைஷ்ணவலாயங்கள், மசூதிகள், மாதா கோவில்கள், பிறசமயங்களின் கோயில்கள் ஆகியவை சமயநிலயங்கள். அவற்றை மொழி நிலயங்க ளென்னலாமா? பெயரை மாற்றினாற் போதும். பொருளை யபகரிப்பது வெகுசுலபம். நாத்திகத் தமிழரும் அச்சமய நிலயங்களின் பொருட் செல்வத்தில் உரிமை பெற்றுவிடுகிறார். அன்றியும் ஒரு சமயத்தார் இன்னொரு சமயத்

தின் நிலயங்களிற் போய் விழுந்து உரிமை கொண்டாடி உழக்கு வர். ஏன் செய்யார்? அவரனைவருந் தமிழரே: அந்நிலயங்களெல்லாந் தமிழருடைமையே: அப்படி அவர் தம் செயலுக்கு அம்மொழியின் பொதுமையைப் புகலாகக் காட்டுவர். அம்மொழிப் பொதுமை சைவநிலயங்களையே அதிகம் பாதிக்கிறது. அவற்றின் தலைவர் அவற்றின் பொருளை அன்னிய சமயங்கள் பற்றிய பிரசாரங்கள், நூல் வெளியீடுகள், கட்டடங்கள் முதலியவற்றுக்கெல்லாங் கொட்டிக் கொடுக்கின்றனர். ஏன்? அவையெல்லாந் தமிழாம். அந்நவீனர் பேச்சைக்கேட்டு அப்படி மோசம் போவானேன்? 'தன்கையா யுதமுந் தன்கையிற் பொருளும் பிறன்கையிற் கொடுக்கும் பேதையும் பதரே.' அது ராஜவாக்கியம். அத்தலைவர் அதை யோர்க. அந்நவீனர் செயல் இன்னும் பல கேடுகளைத் தர விருக்கின்றது. எதிர்காலத்தைச் சிந்திக்க. முட்டின பிறகு குனிய வேண்டாம். வேதசிவாகமங்களின் ஆட்சிக்கு எல்லை எது? அதுவரை சைவாலயங்கள் பொது. தமிழகத்துச் சைவாலயங்களுக்கு மாத்திரம் தமிழகத்தளவிலா எல்லை? அவ்வளவில் வகுக்க விரும்புகின்றன ரவர் அது சைவத் துரோகம். அதைக் களைந்தாக வேண்டும்.

பாரத தேசத்தில் சுதந்தரப்போர் நடந்தது அப்போது எங்குங் கிளம்பிய கோஷம் வந்தே மாதரம், ஜெய்ஹிந்த் என்பன. இப்போது ஜனகணமன, ஜெண்டா ஊஞ்சா என்பன தேசிய கீதங்கள். அவையெல்லாந் தமிழல்ல. அவற்றுக்குப் பொருள் தெரியாத தமிழர் பலராவர். அவர் அவற்றைத் தமிழிற் பெயர்த்தா முழங்கினர்? அந்நவீனராவது அப்படிச் செய்தனரா? அவரும் பிற மாகாணத்தாரோடு சேர்ந்துகொண்டு அவ்வயல் மொழிகளையே மண்டை பிளக்கக் கத்தினர். அவ்விஷயத்தில் அவருக்கு அயல்மொழிப் பகைமையுந் தமிழ்மொழிப் பற்றும் மண்மூடிப் போயின. ஆனால் சமய விஷயத்தில் அவர் தமிழ் தமிழ் என்று துள்ளுகின்றனர். ஒரு கண்ணில் வெண்ணெய் ஒரு கண்ணில் சுண்ணம். அவர் நடுநிலை அது. ஆயினும் அவ்வந்தே மாதர ஜெய்ஹிந்த் கோஷங்கள் இத்தேசத்துக்குச் சுதந்தரத்தை

வாங்கிக் கொடுத்தன. அவரும் சுதந்தர புருஷ ராயினர். அவர் வாயிலும் அத்தேசிய கீதங்களே இப்போதுமுள்ளன. அப்படியே சம்ஸ்கிருத மந்திரங்களும் சைவமக்களுக்குப் பேரின்ப வாழ்வை யெய்துவிக்கவே செய்யும். ஆகலின் சைவாலயங்களில் அவையே ஓதப்படவேண்டும்.

# 11. தமிழ் வெறி.

தமிழர் தமிழைப் போற்றுக. அஃது அவசியம். ஆனால் போற்றுவ தென்ப தென்னை? பழம்பெரிலக்கியங்களைக் கற்றல், சுவைத்தல், புத்திலக்கியங்களை யாக்கல் இவையே. தமிழச் சைவரும் அது செய்யாம லிருக்கவில்லை. ஆனால் அவருக்கு அதன் மேலும் ஒருகடனுண்டு. அதுதான் சைவசேவை. அவர் ஏனைத் தமிழரோடு சேர்ந்துகொண்டு அச்சமயத்தைப் புறக்கணியார். அவர் தமிழெல்லாம் அச்சமயத்தையே மகுடமாகக் கொள்ளும் அவருக்குத் தமிழ் மலர், சைவம் வாசனை; தமிழ் உடல், சைவம் உயிர்; தமிழ் மாது, சைவம் மாங்கல்யம்; தமிழ் பெட்டகம், சைவம் அணிகலன்; தமிழ் கண், சைவம் ஒளி. அவ்விரட்டைகளை இணைத்துக் காண்க. இன்னும் சைவரே தமிழைக் கண்டார். தமிழரால் சைவத்தைக் காணவே முடியாது. அப்படிக் கொள்வர் அச்சைவர். ஆனால் அநநவீனர் போக்கு வேறு. வெறி இருவகைப்படும். நேரிய அபிமானம் மீதூர்வது ஒன்று. நேர்மை திறம்பிய அபிமானம் மீதூர்வது மற்றொன்று. இப்பின்னதே அநநவீனரிட மிருப்பது. அவருக்குஞ் சில தலைவரிருந்தனர். குருமாரும் அவரே. அவரெழுதிய சுவடிகள் சில. அவற்றில் சைவசித்தாந்த தத்துவங்கள் சிறிது விளக்கப்பட்டிருக்கும், அவை சைவ நூல்களிலிருந்து எடுக்கப்பட்டன. ஆனால் அவர் அப்படிச் சொல்லார். அச்சமயம் தமிழ் நூல்களிலிருந்து எடுக்கப் பட்டதாம், ஆகலின் தமிழர் கண்டதாம்: அவர் சொல்கிறார். அஃதாவ தென்னை? சைவம் தமிழரை அறிவுடைய ராக்கவில்லை, அச்சமயஞ் சார்தற்கு முந்தியும் அவர் அறிவுடையராய்த்தா னிருந்தனர், அவ்வறிவே அச்சமயத்தைப் பின்ன ருண்டாக்கியது என்பதே அது. இப்பகுதிதான் அநநவீனருக்கு ருசித்தது.

அதனால் அவர் தமிழைச் சைவத்தோடு பிணைத்தே பேசுவர். சைவம் பரவு மிடங்களில் தமிழும் பரவுக, இன்றேல் சைவமும் சிறகொடிந்து தமிழகத்திலேயே கிடக்க என்கிறா ரவர். அதனால் தமிழுஞ் சைவமும் வாழ்க என அவர் முழங்குவர். ஆயினும் அம்முழக்கம் அதிகமில்லை. அவர் தமிழும் சமயமும் வாழ்க எனவும் முழங்குவர். அதில் சைவம் போய்விடும். சைவம் சிறப்புச் சொல். சமயம் புகுந்து கொள்ளும். சமயம் பொதுச்சொல். அம்முழக்கம் முன்னையதைவிட அதிகம் தமிழ் வாழ்க என்பது அவரது மற்றொரு முழக்கம். அதில் சமயமும் போய்விடும். அம்முழக்கம் வானைப் பிளக்கும். ஆனால் சைவம் வாழ்க என அவர் தனித்தெடுத்து முழங்கார். ஏன்? அவருக்கு நெஞ்சில் சைவம் நஞ்சு; தமிழே தெய்வம்; ஈ-வே-ரா, ஸி-என்-ஏ முதல் எல்லாத் தமிழருந் தேவகணங்கள். அவ்வளவி லவர் மகிழுக இன்னும் சைவம் தமிழர் கண்ட சமயமாகவே யிருக்கட்டும். அதற்காக அவரையும் அத்தமிழையும் பிறமொழிகளுக் குரியார் என்ன செய்யவேண்டும்? தூக்கித் தலைமேல் வைத்துக்கொள்ள வேண்டுமா? அது செய்யமாட்டார். அவசியமு மில்லை. ஆனால் அச்சமயம் தமிழின்றித் தமிழரின்றி வியாபிக்கும். அதன் சக்தி அபாரம்.

தமிழ் வெறி வளர்ந்தது. தாம் பேசுவது இன்னதென அவருக்குத் தெரியவில்லை. தமிழரே சிவனைக் கண்டனராம்: அவர் சொல்கிறார். மனிதனை கடவுளா யாக்கினா னென்பர் நாத்திகர். அதில் மனித னென்னு மிடத்தில் தமிழ ரென்பதையும், கடவுளை யென்னு மிடத்தில் சிவனை யென்பதையும், ஆக்கினா னென்னு மிடத்தில் கண்டனரென்பதையும் வைத்தார் அந்நவீனர் அவ்வளவுதான் கருத்தில் வேற்றுமை சிறிது மில்லை. அவரும் ஏன் நாத்திக ரல்லர்? அவர் சைவ வேடர், ஆனால் நாத்திக நெஞ்சரே.

சில சமயங்களை அச்சமயங்களின் கடவுளர் தந்திருப்பர். சிலவற்றை அவ்வவற்றால் மதிக்கப்பட்ட தனி மனிதர் தந்திருப்பர். அப்படித்தான் எல்லாச் சமயங்களுஞ் சொல்லும். ஹிந்து வென்பது ஒரு சமயமன்று அதை விடுக. ஆனால் ஓரினத்தால் ஒரு

சமயத்தைத் தரவே முடியாது. தமிழரே சைவசமயத்தை உலகிற்குத் தந்தனராம்: போப் என்னும் ஆங்கிலப் பாதிரியார் சொன்னார். அது அவருடைய பாதிரிப்புத்தி. அதனை அப்படியேயெடுத்து அந்நவீனர் விழுங்கினார். இப்போது அதையே தமிழகமெங்கும் அவர் கக்கிவருகிறார். சைவத்தை ஆதியில் இன்ன தமிழ்மகன் தந்தானென அவர் ஒருவனைச் சுட்டிக் கூற வல்லரா? அவன் பெயர் சொல்லத்தான் அவர் பிறக்கவில்லையே.

கோவில்கள், சிவலிங்க முதலிய திருவுருவங்கள், வழிபடு முறைகள் முதலியன சாதனங்கள். அவற்றைப் பண்டைத் தமிழரே வகுத்துக்கொண்டனர் என்பர் அந்நவீனர். அவை முத்தியை யெய்துவிப்பன. அதைக் கொடுப்பவர் பரமசிவனார். ஆகலின் அவரே அவற்றை வகுத்துத் தரவேண்டும். முத்தியை யெய்துதற குரியரே அத்தமிழரும். அவரும் மலப் புழுக்கள்தான். அவரால் அவற்றை வகுத்துக்கொள்ள முடியாது. அவர் பெயரைச் சொல்லிக்கொண்டு அந்நவீனரும் புதுமுறை யர்ச்சனையை வகுச்க முனைகின்றனர் அம்மலப்புழுக்களாலும் அது முடியாது. சைவம் சிவத்தோடு சம்பந்தம். ஆகலின் சைவருக்கு பரமசிவனாரே யெல்லாம். அவரே முத்தி சாதனங்களை வகுத்தருளியவர். அவற்றின் சமூகமே அவ்வேத சிவாகமங்கள். இசுலாமியருக்குக் குரான் எப்படி? சைவருக்கு அவை அப்படி.

வேதங்கள் ரிஷிகளின் வாக்கு, சிவாகமங்கள் கோயிலர்ச்சகரின் புனைவு, புராணங்கள் பார்ப்பனரின் புளுகு எனப் புலம்பு வர் அந்நவீனர். ஆனால் தமிழிலுள்ள சங்க விலக்கியங்கள் முதற சகல சைவ விலக்கியங்களும் அவ்வேத சிவாகமங்களைப் பரமசிவ வாக்கு. புராணங்கள் பதினெட்டையும் பங்க மில்லாதன என்றே கூறிப் போற்றுகின்றன. புராண சரிதங்கள் திருமுறைகளி லெங்கும் காணப்படும். திருக்குறளும் 'இந்திரனே சாலுங் கரி', 'திங்களைப் பாம்புகொண் டற்று' என்றது. ஆகவே பின்வந்த சைவப் பெருநூல்கள், தொன்று தொட்டுள்ள சைவ மஹாஜன சமூகம், சைவகுரு பரம்பரை ஆகியவற்றுக்கு அம்முதல் நூல்களின் கௌரவம் அங்கீகாரமே. ஆனால் 'பலவேத மங்கமாறு

மறை நான்கவையு மானார்', 'மறைகள் வேதம் விரித்து', 'மன்று யுடைய வேதம்', 'அருமறையோ டாறங்க மாய்ந்துகொண்டு பாடினார் நால்வேதம்', 'வேதமாகி யருமறை......தானே யாகி' எனத் திருமுறையிற் சில அடிகள் வருகின்றன. அவர் அவற்றைக் காட்டி வேதம் வேறு மறை வேறு, அவ்வேதம் சம்ஸ்கிருத வேத மாகுக, அம்மறை தமிழ் மறையே என்கிறார் முதலடியில் 'பல வேதம்' என்பது 'அநந்தாவை வேதா:' என்பதற்குத் தமிழ். 'மறை நான்கு' என்பது அவை நான்கான பிறகு பெற்ற பெயர். மற்றை நான்கடிகளிலுமுள்ள 'வேத'மாவது இருக்காதிகள். 'மறை'யாவது உபநிடதங்கள். 'வேதத்து மறை நீ' என்றது பரிபாடல். மறை—உபநிடதங்கள். அந்நூ லுரை காண்க. தமிழ் மறையென்ப தென்றுமில்லை. பிறகு அவர் சங்கவிலக்கியங்களைத் தொடுகிறார். அவை சொல்வதுதா னென்னை? புறநானூறு 'நன்றாய்ந்த நீணிமிர்சடை-முதுமுதல்வன் வாய்போகா-தொன்று புரிந்த வீரிரண்டி-னாறுணர்ந்த வொருமுதுநூல்', 'கேள்வி முற்றிய வேள்வி யந்தணர்', 'நாஅல் வேத நெறிதிரியினும்' என்றும், குறுந்தொகை 'எழுதாக் கற்பு' என்றும், திருமுருகாற்றுப் படை 'மந்திர விதி' என்றும், பரிபாடல் 'மாயா வாய்மொழி', 'வேத மாபூண் வையத்தே ரூர்ந்து' என்றுங் கூறின. வேதங்கள் பரமசிவ வாக்கு; அவை நான்கு; அவையே சுருதி; அவற்றின் நெறியே என்றும் நிலையில் திரியாதது; அவையே எழுதாக்கிளவி; அவையே மந்திரம்; அவையே அழியாத வாக்கு; அவையே குதிரைகளான சரிதத்தை யுடையன. இத்தனையும் உவ்வடிகளிற் பிரசித்தம். இன்ன பிரமாணங்கள் அவ்விலக்கியங்களில் இன்னும் பல. ஆகலின் அவ்விலக்கியங்க ளனைத்தும் அவ்வேதங்களை அவலம்பித்தனவே. ஆனால் அந்நால்வேதங்களும் சம்ஸ்கிருத வேதங்கள்தானா? அப்படி அவர் வினவுவார். இருசுடர் சூரிய சந்திரரே. மூவேந்தர் சேர சோழ பாண்டியரே. நாற்பொருள் அறம் பொருள் இன்பம் வீடுகளே, ஐம்பூதம் பிருதிவி முதலியவே. அத்தொகைப் பெயர்கள் வேறு பெயர்களைக் குறியா. அப்படியே நால்வேத மென்பதும் இருக்காதியவற்றையே குறிக்கும். நச்சினார்க்கினியர் கூறிய நால்வேதங்கள் அவற்றின் பூர்வரூபமே.

ஆகவே சங்கவிலக்கியங்களும் அந்நவீனரை நட்டாற்றில் விட்டன. எஞ்சியுள்ளன மிலேச்ச நூல்கள். அவைதான் அவர்க்குப் பிரமாணங்களாம். அவற்றைக் கொண்டு அவ்வேத சிவாகமங்களின் முதன்மையை அவர் சிதைக்கப் பார்க்கின்றனர். முடியுமா? அம்மிலேச்ச நூல்கள் மென்புலே. அம்முதல் நூல்கள் வன்மலே.

அவர் கொள்கைக்கு எந்த நூலாவது நூற்பகுதியாவது ஆதரவா யிருக்கவேண்டும், அல்லது அக்கொள்கையைப் புகுத்திக் காட்ட அவற்றில் சந்துபொந்துக ளிருக்கவேண்டும். அவைதான் அவர்க்குப் பிரமாணம் திருமுறைகள் அதற்கிடமல்ல. ஆகலின் அவற்றுக்கும் அவர் குறை கண்டனர். என்னே? அறிவாராய்ச்சிக்குப் போதுமான சாதனங்க ளகப்படாத காலம் அது; அக்காலத்தவர் அத்திருமுறைகளின் ஆசிரியன்மார்; ஆகலின் அகப்பட்டவற்றைக் கொண்டுதான் அவரால் பாட முடிந்தது; அஃதவர் குற்ற மாகாது; ஆனல் இப்போது அச்சாதனங்கள் பலவாய்க் கிடைக்கின்றன; புதுக்கருத்துக்கள் உருவாதற்கு அவையே ஏது; திருமுறைகளோடு அக்கருத்துக்கள் மாறுபடக்கூடும்; அதனல் அவற்றைத் தள்ளவேண்டாம்; அத்திருமுறைகளே யொதுக்கிவிடலாம்; இப்படி வாதிப்பா ரவர். உண்மையில் அவர் அவ்வாசிரியன்மாரின் காலத்தைக் குறைகூறவில்லை; அம்முகத்தால் அவ்வாசிரியன்மாரையும், அத்திரு முறைகளேயுமே பழிக்கின்றனர். தம் காலத்தை மதிக்குமுகத்தால் அவர் தம்மையும் தம் சுவடிகளேயுமே மதித்துக்கொள்கிருர். எந்த இசுலாமியராவது குரான் விஷயத்தில் இப்படிப் பேசுவரா? மேலும் அந்நவீனர் அம்மிலேச்ச நூல்களைப் பிரமாண மாக்கவேண்டும்; அதற்காகவும் அப்பழிப்பைப் பரப்புகின்ருர். ஆனல் உண்மை யாது? அவ்வாசிரியன்மாரி னறிவு காலவச மன்று, பிரகிருதிகுணவச மன்று, பரமசிவனின் திருவருள் வசமானது ஆகையால் அவ ரருளிய திருமுறையுபதேசங்கள் முக்காலத்துக்கும் பொருந்தக் கூடிய சத்தியமேயாம்

தமிழ் ஒருமொழி. அதன் பெயருந் தமிழென்பதே அம்மொழியும் பெயரும் ஒருசேரத் தோன்றின. அப்படியே சைவம்

ஒரு சமயம். அதன் பெயருஞ் சைவமென்பதே. அச்சமயமும் பெயரும் ஒருங்கு தோன்றின, முன்பின்னாகத் தோன்றவில்லை. அச்சமயம்போல் அப்பெயரும் சர்வகால சர்வஜன சர்வசாஸ்திரப் பிரசித்தம். அப்படியிருக்க அந்நவீனருக்கு மாத்திரம் அப்பெய ரில் அருவை ஏன்? அவர் ஊர்தொறுந் திருக்கூட்டம் ஸ்தாபிக் கின்றனர். அது சைவசமயத் திருக்கூட்டமன்று. அதன் பெயர் வேறு. அப்பெயரைப் பார்த்தால் அத்திருச்கூட்டம் சைவசேவை செய்ய வந்ததாகச் சொல்லமுடியாது அப்பெயர் சேற்றில் நட்ட கம்பம். இழுத்த பக்கமெல்லாம் அது சாயும். அதுவும் சைவ மென்பதன் பிரதிபதமே யென்பா ரவர். பிரசித்தமான பெயரை அவர் ஏன் விட்டனர்? அக்கரவு என்றுவது வெளிப்படும். இன் னும் தமிழ்க் கழகத்தை இனிமைக் கழகம், நீர்மைக் கழகம் என வழங்கலாமா? அதற்குமட்டில் அவ ரிசையார். வடநாட்டில் ஆரியசமாஜம், பிரமசமாஜம், ஸாயிசமாஜம் எனச் சில சமாஜங்க ளுள. அப்படியொன்று தமிழகத்திலும் உண்டாக்கவேண்டும் அவ ராசை யது. அதன் விளைவே அத்திருக்கூட்டம். சமாஜம்—கூட்டம். அத்திருக்கூட்டமும் அச்சமாஜங்களோடு சேரத் தகுந் ததே. அவர் வடவரை வைவர், பிறகு அவர் கொடுக்கைப் பிடிப்பர். மேலும் அச்சமாஜங்கள் அகிலபாரத நோக்கமாவது உடையன. அத்திருக்கூட்டத்துக்கோ தெய்வ முதல் சகல மு ந் தமிழ்மொழியே. சைவ மக்களுக்கு அங்கு என்ன வேலை?

அந்நவீனர்பால் இன்ன வெறிகள் இன்னும் பல. இங்கு இவ்வளவு போதும். பிற பின்.

அவருக்கு உபதேசித்த குருமார் சிலர். அவருள் முக்கிய மானவர் இரண்டொருவரே. அவர் போய்விட்டனர். அவர் சீடருள்ளும் பலர் போயினர். எங்கே? 'புத்திவித் தாரந் தன்னாற் பொருகலி வசத்தாற் பூண்ட—வித்தையாற் பொருளிச் சிப்பால் வேதத்தின் வழியை விட்டுக்—குத்திர மார்க்கங் காட்டுங் குரவ னும் புதல்வன் றானும்—பத்திர நரகில் வீழ்வர் பன்னிரத் தியாயஞ் சான்று' என் ற து ஒரு தமிழ். அவரெல்லாம் போயிருக்கு மிடத்தைத் அதனால் தெரிக. இப்போதுள்ள அந்நவீனரும் அங்கே

தான் போக விரும்புகின்றனரா? அன்றியும் தமிழகத்திற் பெரும் பகுதி அன்றே கடலில் மூழ்கியது. காரணம்? அக்காலைத் தமிழர் செய்த தீவினையே. அத்தீவினை எது? சைவத் துரோகம். இன்றேல் அப்பெருங்கேடு சம்பவித்திராது. அந்நிலம் ஆழ்ந்தது. தமிழறிவு நூல்கள் பல மறைந்தன. தமிழர் பலர் செத்தனர். தமிழென்னுங் கற்பனைத் தெய்வத்தால் அக்கேட்டைத் தடுத்துக் கொள்ளமுடியவில்லை. அதன் தவிப்பு அந்தோ பரிதாபம்! இப்போது சிறுபகுதித் தமிழகமே எஞ்சியுள்ளது. அதுவாயினும் நிலைபெற வேண்டும். அந்நவீனர் செய்யுஞ் சைவத் துரோகம் அச்சந் தருகிறது. அவர் விரைவில் திருந்துக. தமிழை விட்டாலுஞ் சைவஞ் சீவிக்கும். சைவத்தை விட்டால் தமிழுக்குச் சீவனமில்லை.

# 12. முடிப்புரை.

தமிழ் மந்திரங்களென்பது என்றுமில்லை. அவை அந்நவீனரின் கற்பனையே. அவற்றைத் தமிழகச் சைவாலயங்களில் ஓதவே கூடாது. அவ்வோதுகை சைவசமயத்துக்கு முற்றிலும் புறம்பானது. அங்கு வேதாகமோக்த சம்ஸ்கிருத மந்திரங்களே ஓதத் தகுவன. உவற்றையே அன்றேபோல், இன்றேபோல், என்றும் ஓதிவரவேண்டும். அதுவே சைவ நலம். இவ்விஷய நிரூபணமே இப்புத்தகம். இன்ன எதிர்ப்புக்கள் இன்னுமிருக்கலாம். அவை அந்நவீனரை உறுத்துகின்றனபோலும் ஆயினும் அவர் கொண்டது விடார். தம் கொள்கையைச் சிறிதாவது பலிதமாக்கவேண்டும்: அவர் துடிப்பது. என்னை? தமிழர்ச்சனையை விரும்புவார் ஆங்காங்குளர், அவருக்காகத் தனிப்பட்ட முறையிலாவது அவ்வர்ச்சனையே நடத்தவேண்டும். அவ்வேற்பாடவசியம்: இப்படிச் சொல்கிறுரவர். சைவாலயங்கள் பரார்த்த பூசா நிலயங்கள். அங்குள்ள பூசைகளுக்கு விதிநூல் சிவாகமங்கள். அங்கு வழிபட வருகிறவர் எவரேனுமாக, அவர் அவ்விதிநூலுக் கடங்கியே விரும்பவேண்டும். அதற்குமேல் விரும்ப அவருக் குரிமையில்லை. விதியைக் கடந்த தனிப்பட்ட விருப்பம்

இலௌகிகங்களிற்றானுஞ் செல்லாது. இலௌகிக விதிகளே அந்த மட்டடந் தட்டிவிடும்.

சைவாலயங்களில் அக்கிரமங்கள் மலிந்து விட்டன, அவற்றை யொழிக்கவேண்டும்: அந்நவீனர் கதற லது. அக்கிரமங் களை யெடுத்துப் பேசலாம். அது திறமையன்று கிரமங்கள் எவை? அவற்றைப் பிரமாண சகிதம் அவர் வெளியிடுக. அவ் வக்கிரமங்கள் தாமே போய்விடும். ஆனால் கிரமப்பிரசாரங்கள் அவர் திருக்கூட்டத்தில் எவரிடமுமே கிடையா. ஏன்? கிரமங்கள் சிவாகம விஷயம். சிவாகமப் பயிற்சி அவரிடம் சூனியம் அன்றி யும் சைவாலய நிர்மாணம், பிரதிஷ்டை, உத்ஸவம், அர்ச்சனை முதலியவெல்லாம் சிவாகம விதிப்படி நடப்பன அஃதாவது அவ்வாலயங்களைச் சிவாகமங்களே ஆட்சி செய்கின்றன என்பது. சைவாதீனங்களிலும் அவ்வாட்சிதானுள்ளது. அந்நவீனர் அவ் வாலயங்களாதியவற்றை அவ்வாட்சியிலிருந்து பறிமுதல் செய் யப் பார்க்கின்றனர். நாயகனிடமிருந்து நாயகி வஞ்சனையாற் பிரிக்கப்பட்டாள். பிறகு அவளுக்கு ஆதரவாவார் யாருமிலர். அவள் கதி யென்ன? எல்லாருக்கெல்லாம் அவள் ஆட்படுவாள். அவ்வளவுதான். அந்நவீனரும் அப்பறிமுதல் செய்ய முயல்வதன் மூலம் அச்சைவ நிலயங்களை அந்நாயகிபோலாக்கிவருகின்றனர். அதனால் அவற்றில் எத்தனைபேர் எத்தனை புதுமைகளைப் புகுத்தி னர்? அவருள் எவருக்காவது சைவம் சமயமா யிருந்ததா? சிவாக மங்களில் கௌரவ புத்தி யிருந்ததா? அவை சைவசமய தெய்வ விதிநூல்களென்ற பிரக்ஞை்தானு மிருந்ததா? சைவ சமூகத்துக் கும் அந்நிலைவு போக்கப்பட்டது. அதனாலன்றோ 'கோவில்களில் ஹரிஜனங்களை சாதாரண வேலையாட்களாகவும் சமையற்காரர் களாகவும் அர்ச்சகர்களாகவும் நியமிக்கும் பிரச்னை சர்க்காரின் தீவிர பரிசீலனையில் இருந்துவருவதாக ஹிந்துமத தர்ம பரிபாலன மந்திரி ஸ்ரீ பி- பரமேஸ்வரன் கூறினர்' என்ற செய்தியும் வரலா யிற்று அதை 6—5—54 'தினமணி'யிற் காண்க சைவசமயம் சிவாகமங்களைப் பரமசிவ வாக்கென்னும். அச்சமயத்துச்கு அவற் றில் விதிக்கப்பட்டனவே தருமங்கள். விலக்கப்பட்டனவே அதருமங்கள். எல்லாச் சமயிகளுச்கும்போல் சைவசமயிகளுக்கும்

அச்சைவதருமாசரணையிற் பாதுகாப்பளிப்பதே அரசுக்குக் கடன். அப்பாதுகாப்பே பரிபாலனம். அப்பத்திரிகையிற் கண்ட விஷயம் பரிபாலன மன்று, அத்தருமங்களையே மாற்றியமைப்பதாம். அரசுக்கு அவ்வுரிமை யுண்டா? மற்றைச் சமயங்களின் வேதங் களிலிருந்து ஒரு தருமத்தையாவது மாற்றியமைக்க அதனால் முடியுமா? சிவாகம தருமங்களை வகுத்த பரமசிவனுருந் தம் போன்றவர்தானென அம்மந்திரி யெண்ணிக்கொண்டார்போலும். ஆயினும் அஃதவர் குற்றமன்று. அந்நவீனரின் அப்பறிமுதற் புத்தியே அதற்கு மூலம். அவர் அந்நிலயங்களைக் கண்டவர் கொள்ளையாக்கினர். அவை கேட்பா ரற்றன வாயின. போவார் வருவாரெல்லாம் அவற்றில் கைவைத்தனர். அவற்றின் கற்பைக் கலக்கினர். அம்மந்திரியுந் தம் பங்கைச் செய்ய எத்தனிக்கிறார். தமிழர்ச்சனை முதலிய தம் புதுமைகளைப் புகுத்தவும், அதனாற் புகழ் பெறவும் அந்நவீனருக்கும் அப்போதுதான் இயலும். அதற் கேற்பத் தமிழகத்தில் அவருக்குத் திரண்ட செல்வம், அகன்ற கலகலக் கல்வி, உயர்ந்த பதவி, பரந்த செல்வாக்கு, படாடோபப் பிரசங்க சாமர்த்தியம், சாமானியரை அவருக்கு நலஞ்செய்வது போல் நடித்துத் துணைசேர்த்துக்கொள்ளுஞ் சூழ்ச்சித்திறம், பிற பெருமிதங்கள் எல்லாமிருக்கின்றன. அவை நல்லசாதகங்கள். அவற்றைக் கொண்டு தம் ஆசையை நிறைவேற்ற அவர் முயல் கின்றனர். அதைவிட அடாதசெயல் வேறு முண்டோ? அவ்வக் கிரம நவீனருக்கு யூதாஸ்காரியோத்துக்களுக்குப் புகழ் வரக் கூடும். ஆனால் அது சான்றோரிடமிருந்து வந்த சபாஷ் ஆகாது. ஆகலின் முதலில் அவருடைய அக்கிரமத்தைத் தொலைக்க வேண் டும். சைவ சாஸ்திர விற்பன்னரால் அது முடியும். சைவ சமூகத் தில் அவர் அத்தமித்துப்போகவில்லை. இன்றும் எத்தனையோ பேரிருக்கின்றனர். அவர் முறபடுக. சமூகம் ஒத்துழைக்குமா? அச்சந்தேகம் அவருக்கிருக்கலாம். சமூகம் பாரம்பரியமாகவே சிவதருமத்தில் ஊறியதுதான். அந்நவீனரின் ஆரவாரத்தால் அது தன்னை மறந்து கிடக்கிறது. ஆயினும் அது தாற்காலிகமே. அவ்விற்பன்னர் தம் கடனைத் தொடங்கட்டும். சமூகம் நிச்சயம் விழித்துக்கொள்ளும். அந்நவீனரைக் கண்டே அவ்விற்பன்னர்

ரஞ்சுகின்றனரோ? அதுவும் வேண்டாம் அந்நவீனர் தமிழைக் காட்டியே சமூகத்தை யேய்க்கின்றனர். அவர் காலத்துக்கு முன் தமிழகத்தில் எத்தனையோ சைவத்தமிழ்ப் பெருநூல்கள் மலிந்து கிடந்தன. அவர் தலையெடுத்தனர். அவற்றுட் பல மறைந் தொழிந்தன. அவரே அதற்குக் காரணம். அந் நூல்களை யொழித்த அவர் அம்மொழியபிமானிகளாத லெப்படி? அவர் சைவவேடமும் அவரைச் சமூகத்திறகு மாற்றிக் காட்டுகிறது. வேடநெறி அவருக்கில்லை. அன்று வைகைக் கரையில் கழுவேறினூர் சமணர். அவர் சைவர்பால் வஞ்சந் தீர்த்துக்கொள்ள எண்ணினரோ? அப்படியானுல் அவரே அவ்வேடம் பூண்டு அந் நவீனராய்த் திரிகின்றூர். அவர் சுவடிகளே அத்தனைக்குஞ் சான்று. அவ்வுண்மையை அவ்விற்பன்னர் எடுத்துக்காட்டுக. அந்நவீனருக்குக் குலைநடுக்கங் காணும். காலப்போக்கு, உலகப் போக்கு, சமூகப்போக்குகளை யனுசரிக்கவேண்டுமென அவர் அவ் விற்பன்னருக்குப் புத்திகூற வருவர். இலௌகிகத்துக்கு அது சரி யாகலாம். சமய விஷயத்தில் அது ஆபத்தே மேலும் ஆற்று வெள்ளம் மரக்கட்டையை யடித்துக்கொண்டு போகிறது. அக் கட்டைபோ லாகுக என்பதே அப்புத்தி. அது தகுமோ? அவ்விற் பன்னர் ஆண்மையோ டெழுந்து செயலாற்றுக. சைவபரிபால னம் அவர்க்கே கடன். அவர் ஒதுங்கி நின்று அந்நவீனருக் கிடங் கொடுக்கக்கூடாது. கொடுத்தால் அவருஞ் சைவத் துரோகிகளே.

மாகாண மொழிப் பகைமை ஆங்காங்கே தலைதூக்குகின் றது. பாரத தேசாபிமானத்தால் அது மறையுமெனச் சொல்ல முடியாது. ஏன்? தேசாபிமானம் பலித்த பிறகுதான் அது புறப் பட்டது. அது மறையவேண்டும். அதற்கு வழியொன்றே. அது தான் சமயாபிமானம். சைவசமயமே இத்தேசத்துச் சனாதன தருமம். அதைத் தேசமுழுதும் அறிக. ஆசரிக்க. அதற் காவன வற்றை அவ்விற்பன்னர் செய்யட்டும். அப்போது ஆந்திரச் சைவர் சைவத் தமிழ் நூல்களை மதிப்பர். தமிழகச் சைவர் சைவத் தெலுங்கு நூல்களை மதிப்பர். அப்படியே பிறவும். அப்படிச் சமயத்துக்கு முதலிடங் கொடுக்க, மாகாண மொழிக்ளை

அதனு ளடக்கிப் போற்றுக அப் பகைமை யொழிவ துறுதி.
அவற்றை மாறிச் செய்தால் அது புகைந்து கொண்டுதானிருக்கும்.

மறைகள் நிந்தனை சைவ நிந்தனை பொறுமனம், தீமை யாம் புறச்சமயங்கள் ஒழித்திடு திறன், நினைவில் வேறொரு கடவுளை வழிபடாநிலை, இம்மூன்றுமே சைவசமய மானம். அவற்றை யுடையாரே அதனை யுடையார். அந்நவீனருக்கு அம் மூன்று மில்லை. அவரை விடுக. சைவ மக்களுக்குப் பிறசமய தூஷணங் காரியமன்று. ஆனால் சைவ தூஷணத்தை எக்காரணங்கொண்டும் அவர் சகியார். அவருக்கு நாத்திக பய மில்லை. அதனை யொழிக்க அவரால் முடியும். நாத்திகத்துக்குப் பயந்த சமயங்களோடு கூட்டு அவருக் கநாவசியம். இறுதியில் அக் கூட்டு கேலிக்கிடமாகும். காங்கிரசுக்குப் பயந்த ஐக்கிய முன்னணிக் கதையைக் காண்க. மேலும் அக்கூட்டால் சமயங்கள் குழம்பும்; எச்சமயியுந் தன் சமயத்தை உள்ளபடி அறிந்து கொள்ளமாட்டான். ஒருக்கால் அரசியல் நிர்ப்பந்தம் அக்கூட்டை அவசியப்படுத்தும். அப்போது அச்சைவர் தம் சமயத்தின் தனி யியல்பைக் காத்துக்கொள்க. அவ்வகையில் அவர் சிறிதும் ஏமாறக்கூடாது. ஏமாறினால் அக்கூட்டு அச்சமயத்துக்கு நாத்திகத்தினுங் கேடாய் முடியும்.

சம்ஸ்கிருதம் ஒரு மாகாணத்துக்கோ, இனத்துக்கோ, குலத்துக்கோ, உரியதன்று. உரியதெனச் சொல்பவர் மடவோரே. சைவத்தை அப்படிச் சொல்பவரும் மடவோர்தான். மாகாண மொழிகளெல்லாங் கூவல்கள். அவற்றுள் எதிலும் அச்சமயம் அடங்கிவிடாது. ஏன்? அது குரைகடல். எச்சமயத்துக்குமே நாடு மொழி இனம் குலம்பற்றிய பெயர் கிடையாது. சைவத் துக்கும் அஃதில்லை. அந்நவீனருக்கு அது தெரியுமா? அவர் கட்டையும் விழும். அதுவரை அவர் தமிழர் சமயம், தமிழர் மதம் என்றே கத்துவர். அப்படியே அவர் காலங் கழியும் குதிரைக் கொம்புதான் தமிழர் சமயம். ஆனால் சில சந்தர்ப்பங்களில் சைவத்தைத் தமிழர் சமயமென்பா ரவர். அது பெயர் மாற்றம் பெயரை யாற்றுவது அடாத செயல். இக்காலைச் சைவத்துக்குக்

கேடர் வேறெச் சமயத்தினருமல்லர், நாத்திகர்தானுமல்லர், அவ்வஞ்சரே. சைவமக்கள் அவரோடிணங்கிச் சமய தரித்திர ராகவேண்டாம். அவர் சம்ஸ்கிருதத்தையும் பயிலுக, அதிலுள்ள சைவப் பெருநூல்களையுங் கசடறக் கறக. அவ்வழியாய் மற்றை மாகாணச் சைவரோடு அளவளாவுக. அவ்வளவளாவிய வாழ்வு மிகமிக அவசியம். அதுவே அகில பாரத வைதிக சைவ சம்மேளனத்தைக் கூட்டவல்லது. அச்சம்மேளனம் சைவசேவைக்குப் புறப்படட்டும். அச்சமயம் எவ்வளவு விளக்கம் பெறும்! எத்தனை கோடி மக்களுக்குப் பயன்தரும்! அச்சம்மேளனம் இன்றியமையாத தன்றோ? சைவர் அதனை உணரவேண்டாமா? என்று? அன்றே நன்னாள். அவரே சத்தியமான ரோஷமிக்க சைவாபிமானிகள். ஆனால் அவ்வாக்க வேலைக்கு வழியடைக்குங் கல் அந்நவீனரே. அவர் புத்தி தமிழ்ப்பித்துக் கொண்டது. மிகக் குறுகலானது, மிகமிகக் கீழ்த்தரமானது. சைவாபிவிருத்திக்கு அவரை நம்புவதும், ஆற்றைக் கடத்தற்கு மண் குதிரையை நம்புவதும் ஒன்றே. சைவப் பிரசார மேடைகளில் அவரை ஏற்றுக; அங்கும் அவர் சைவப் பிரசாரஞ் செய்யார்; தமிழ்ப் பெருமை, தமிழர் பண்பாடு என்றுதான் கூவுவர். அவரை வைத்துக்கொண்டு சைவமக்கள் என்ன செய்ய? ஆகலின் முதலில் அம்முத்தநாதரைத் திருத்தியாக வேண்டும், அல்லது அடக்கியாக வேண்டும் அதன் பொருட்டுச் சைவப் பெருமக்கள் இன்றே ஒருப்பட்டெழுக.

சைவமே ராஜாங்க சமயம்: பரமசிவனாரே அச்சமய முழுமுதற்கடவுள். சம்ஸ்கிருத வேதசிவாகமங்கள் அவரருளிய முதல் நூல்கள். அவையே பாரததேச முழுவதற்கும் சைவசமய சர்வபிரமாண சாத்திரங்கள். அவற்றோடு தமிழச் சைவருக்குப் பன்னிரண்டு திருமுறைகளும், பதினான்கு சித்தாந்த சாத்திரங்களும், ஸ்ரீ சிவஞான மஹாபாஷ்யமும் சர்வபிரமாணங்கள். இருமொழிகளிலுமுள்ள அந்நூல்கள்தான் சைவ சமய சாத்திர வரம்பு. அவற்றோடு ஒத்துச் செல்லும் சைவஞான நூல்கள் பிறவுமுள. அவையும் பிரமாணங்களே. அச்சர்வபிரமாணங்களோடு ஒத்துச்செல்லாத நூல்களோ நூற்பகுதிகளோ பிரமாணங்களாகா [illegible]மிழாயினும் ஓதுக்கத் தகுந்தனவே,

அச்சர்வ பிரமாண சாத்திரங்கள் இட்டுள்ள கட்டளைகள் பல, சைவ சமூகம் அவற்றுக் கடங்கவே வேண்டும். அதுவே அச்சமூகத்துக்குக் கௌரவம். அம்முறையில் அச்சமூகத்தின ரொவ்வொருவரும் சிவதீக்ஷை பெறறுக்கொள்க. சிவசின்னந் தரித்துக் கொள்க. ஆன்மார்த்த சிவபூசை யெழுந்தருளப் பண்ணிக்கொள்க. சைவ விரதங்களைச் சிரத்தையோ டனுட்டித்து வருக. சைவாலயங்களைச் சிவாகம விதிப்படி நிருவகிக்க. அச்சேவையையும் ஆர்வத்தோடு புரிக. குருபூசைகளையும் அவ்விதிப்படி செய்க. சைவாசிரியன்மாரையும் ஏனைச் சிவனடியார்களையும் பொது நீக்கி வழிபடுக. சரியையாதி சாதனங்களை வழுவாமற் கடைப்பிடிக்க. குடும்பங்களில் நடைபெறுங் கலியாணம் சீமந்தம் சிராத்தம் முதலிய வனைத்தையும் சைவ முறைப்படி அதற்கதற் குரிய மந்திரங் கிரியையாதிகள் சகிதம் செய்து மகிழ்க. அம்மந்திரமாதியவற்றைச் சிவாகமங்களிலிருந்து கிரமமாகத் திரட்டி வைத்துக்கொள்க. அவற்றுக் கிணக்கமான குலாசார சம்பிரதாயங்களையும் வேண்டுமாயிற் சேர்த்துக்கொள்க. சைவப் பெருநூல்கள் மலிந்து கிடக்கிற தமிழ் சம்ஸ்கிருதங்களை நன்கு பயிலுக. அந்நூல்களை யெல்லாந் திறம்படக் கறருய்க. தமிழை ஓட்டவையாமல் சைவத்தை யெடுத்துப் பிற மாகாணங்களிலுஞ் சென்று பரப்புக. பிற சமயங்களைக் குறை கூறற்க. சைவசமயத்தைப் பிறர் தூஷிக்கவும் இடங்கொடாதிருக்க. அச்சமயம் பற்றிய குழறுபடைப் பிரசாரங்களை விடுக. சமூகம் சமயம்பற்றிக் குழம்புமாறு செய்யற்க. அதனிடம் சமயங்களின் கலவைகளைப் புகுத்தற்க. தந்நலத்தை மறக்க. சைவநலத்தையும், ஜனநலத்தையுமே கருதுக. இத்தனையுந் திட்டங்கள். இவை சிலவே. இவற்றுக்கிணக்கமானவற்றையுஞ் சேர்த்துக்கொள்க. இவற்றை நோக்கமாக வைத்து ஊர்தொறும் சைவசித்தாந்த சபைகளை நிறுவுக. பாரததேச முழுவதறகும் நன்ருமபடி அவற்றைத் திறமாக நடத்துக. அவற்றின் வழியாய்ச் சைவசமயத்தைப் பரிபாலிக்க. மக்களெல்லாஞ் சைவநலங்கனிய வாழுமாறு காண்க. அந்நலம் வழிவழி கிடைத்து வருதற்கும் ஆவனவற்றைச் செய்க

சங்கரநயினார்கோயிற் சைவசித்தாந்த சபையும் அந்நோக்குங் கொண்டே தொடங்கித் தொண்டாற்றி வருகிறது

பெருமழுவர் தொண்டல்லாற் பிறிதிசையோம்.
பழைய வைதிக சைவம் பரக்கவே.
மேன்மைகொள் சைவநீதி விளங்குக வுலகமெல்லாம்.

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.

---

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க.
ஸ்ரீ சிவஞான சுவாமிகள் திருவடி வாழ்க.

JAI VEDHA SHIVAGAMAS
JAI SIDHDHANTHA SHAIVAM
JAI BHARATH.

—(●)—

உ

ஓம் நம: சிவாய

ஓம் ஸ்ரீ ஹரதத்தாசார்ய வர்யாய நம:

# தமிழ் அர்ச்சனை.

நமது தேசத்தில் ஸர்வேச்வரன் உலகானுக்ரஹமாக ஸ்வயம்பு, திவ்ய, தேஜோலிங்க வடிவங்கள் தாங்கி எங்கும் கோயில் கொண்டிருக்கிறார். இமயமலை முதல் இராமேசுரம், ஸேது பர்யந்தம் ஸர்வ ஜனங்களுக்கும் பொதுவான பரார்த்த மென்று வழங்கும் திவ்ய க்ஷேத்ரங்களில் பிரணவர் முதலாகத் தேவரிஷி, மனுஷரிஷி பர்யந்தம் உபதேசிக்கப்பட்டு வழிவழியாக வந்த வேதாகம விதிப்படி அதற்குரியவர்கள் அதில் கூறிய மந்த்ரங்களாலேயே பூஜித்து வந்திருக்கிறார்கள். இந்த விதிகளைத் தமிழரசர்களான சேர, சோழ, பாண்டியர்களும் மாறுதலில்லாமல் பாதுகாத்துப் பரிபாலித்து வந்திருக்கிறார்கள். சர்வேச்வரனுடைய கட்டளையது.

ஒரு தந்திரத்திற்குரிய மந்த்ரத்தை வேறு தந்த்ரத்தினால் பூஜிக்கப்பட்டு வரும் கோயில்களில் கலக்கக்கூடாது. அப்படிக் கலந்தால் தந்த்ர சங்கரதோஷம் ஏற்படும்.

ஸம்ஸ்கிருத வேதங்களின் ஸாரங்களை சைவஸமயாசார்யார்கள், திருமூலநாயனார் முதலியவர்கள் தேவாரம், திருவாசகம், திருமந்த்ரம் முதலிய திருமுறைகளாகத் தமிழில் எல்லாரும் உணர்ந்து உய்யும் வண்ணம் பாடினார்கள். ஆயினும் அவர்கள் ஒரு கோயிலிலாவது-பூஜை நடந்த முறையை மாற்றவோ, பாஷையை மாற்றவோ, பரார்த்த பூஜையைத் தாங்கள் பாடிய பாசுரங்களால் செய்யவேண்டுமென்றோ சொன்னவர்களுமல்ல, நினைத்தவர்களுமல்ல.

கோயில்களில் நடக்கும் பரார்த்த பூஜை, இந்தியாவில் வழங்கிவரும் பல பாஷைகளுக்குத் தாய்பாஷையான ஸம்ஸ்கிருதத்தில் நடப்பதே முறை. தனிப்பட்ட அன்பர்கள் தங்கள் தங்கள்

பாஷையில் உள்ள ஸ்தோத்ரங்களை ஆன்மார்த்தமாகப் பாடி மகிழ்ந்து, இஷ்டஸித்தி யடைவதே முறை. இப்பொழுது திடீரெனத் தமிழ் மந்த்ரங்களால் அர்ச்சிப்பதால் இதுவரையில் பூஜித்து வந்த மந்திரங்களுக்குப் பழிப்பும், ஆலயங்களில் பாஷா கிளர்ச்சியும் ஏறபடும்.

ஆகையால் மடாதிபதிகளும், ஆலய நிர்வாகஸ்தர்களும் ஆலயங்களில் வழக்கமாக நடந்து வரும் அர்ச்சனை, பூஜைகளை மாறுமல் இருந்து, உலக க்ஷேமத்திற்கு பங்கம் ஏற்படாமல் பாதுகாக்கவேணுமாய்க் கேட்டுக்கொள்கிறேன் சுபம்.

புண்ணியகோடி ஸோமசுந்தரக் குருக்கள்.

